# உள்ளே

# பாதை

வரலாறு பயணிகளுக்கு மிகவும் நன்றிக்கடன் பட்டிருக்கிறது. பயணிகள் புதிய நிலங்களை, நாடுகளை, கண்டங்களைக் கண்டறிந்திருக்கிறார்கள். புதிய விலங்கினங்களையும் பறவைகளையும் அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள். நாடுகளுக்கு இடையில் வணிக உறவுகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அறிவியல் வளர்ச்சியைத் துரிதப்படுத்தியிருக்கிறார்கள். தொழில்நுட்பத்தை வளர்த்திருக்கிறார்கள்.

உலகம் உருண்டையானது என்பது பயணங்கள் மூலமாகவே நமக்குத் தெரியவந்தது. ஐரோப்பாவில் இருந்து இந்தியாவுக்குக் கடலில் வரமுடியும் என்பதைப் பயணிகளே கண்டறிந்தார்கள். கடல் பயணம் இல்லையென்றால் அமெரிக்கா இல்லை.

ஒரு சவாலாக நினைத்து கடலில் கால் பதித்தவர்கள் ஏராளம். ஆசியா போனால் செல்வந்தர் ஆகிவிடலாம் என்னும் கனவோடு கப்பலில் இறங்கியவர்கள் பலர். அறிவியல் ஆய்வுகளுக்காகவே கப்பல் பயணம் மேற்கொண்டவர்கள் இருக்கிறார்கள். அரசியல் காரணங்களுக்காகப் பயணம் செய்தவர்கள் இன்னொரு வகை. பெரிய நோக்கங்கள் எல்லாம் இல்லாமல், சாகசத்துக்காகக் கடல் பயணம் மேற்கொண்டவர்களும் இருக்கிறார்கள்.

பயணம் மனிதர்களைப் பிணைத்திருக்கிறது. கடலும் மலையும் நாடும் கண்டமும் பிரித்தாலும் உலகம் என்பது ஒன்றுதான். வெவ்வெறு மொழிகள் பேசினாலும், விதவிதமான ஆடைகள் அணிந்தாலும், வெவ்வேறு வகையான வாழ்க்கைமுறையைக் கடைபிடித்தாலும் மனிதர்களுக்கிடையே அடிப்படையில் எந்த வேறுபாடும் இல்லை என்பதைக் கடல் பயணங்களின்மூலமே உலகம் தெரிந்துகொண்டது.

அதே பயணங்கள்தான் மனிதர்களைப் பிளவுபடுத்தவும் செய்தது. எங்கெல்லாம் இயற்கை வளங்கள் இருக்கின்றன என்பதைத் தெரிந்துவைத்துக்கொண்டு பலர் படையெடுத்து வருவதற்கும் ஆக்கிரமிப்புகள் செய்வதற்கும் பயணங்கள் உதவியுள்ளன.

ஒரே பயணம் சிலருக்கு நன்மையையும் வேறு சிலருக்குத் தீமையையும் கொண்டுவந்து சேர்த்திருக்கிறது. உதாரணத்துக்கு,

வாஸ்கோ ட காமா இந்தியாவுக்கு மேற்கொண்ட பயணத்தால் அவருடைய நாடான போர்ச்சுகல் நன்மையடைந்தது. ஆனால் இந்தியா ஒரு காலனி நாடாக மாறிப்போனது.

கடல் பயணங்களை மேற்கொண்டு அற்புதமான பல ஆய்வுகளையும் கண்டுபிடிப்புகளையும் பலர் நிகழ்த்தியிருக்கிறார்கள். வழிமறித்துக் கொள்ளையடிப்பதற்காகவே கப்பலில் சென்ற கொள்ளையர்களும் இருந்திருக்கிறார்கள்.

பிரச்னை கடலிடமோ கப்பலிடமோ இல்லை. கடல் எல்லோரையும் ஒன்றுபோலவே வரவேற்கிறது. கப்பல் எல்லோரையும் அன்புடன் வரவேற்று சுமந்துசெல்கிறது. பயணம் செய்பவர் யார், அவருடைய நோக்கம் என்ன என்பதில்தான் வேறுபாடு அடங்கி இருக்கிறது.

சுட்டி விகடனில் 'சென்றதும் வென்றதும்' என்னும் தலைப்பில் வெளிவந்த தொடரின் நூல் வடிவம் இது. ஐயோ வரலாறா என்று அலறும் இளம் வாசகர்களுக்கு அந்தத் துறையின்மீது ஆர்வத்தை ஏற்படுத்துவதற்காக கதை போல் எளிமையான நடையில் இந்த அத்தியாயங்கள் எழுதப்பட்டுள்ளன.

சில முக்கியமான பயணங்களை மட்டுமே என்னால் தேர்ந்தெடுக்கமுடிந்தது. பயணிகள் குறித்து எளிமைப்படுத்தப்பட்ட சித்திரங்களை மட்டுமே அளிக்கமுடிந்தது. இதில் இடம்பெறும் ஒவ்வொரு பயணியைப் பற்றியும் அவர்களுடைய ஒவ்வொரு முக்கியமான பயணம் பற்றியும் தனித்தனியே பல நூல்கள் எழுதப்பட்டுள்ளன. இவர்களில் சிலர் தங்களுடைய பயண அனுபவங்களை தாங்களே எழுதியிருக்கின்றனர். அவற்றையெல்லாம் நாடிச் சென்று படிக்கவேண்டும் என்னும் ஆர்வத்தை ஏற்படுத்துவது மட்டுமே இந்தப் புத்தகத்தின் நோக்கம்.

இருவருக்கு நன்றி சொல்லவேண்டும். எழுதுவதற்கான வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தவர் சுட்டி விகடன் இதழின் பொறுப்பாசிரியர், கணேசன். வெளிவந்த அத்தியாயங்களைத் தொகுத்து, செம்மைப்படுத்தி புத்தக வடிவுக்குக் கொண்டுவந்தவர் சுஜாதா. இந்த இருவரின் ஆர்வமும் ஆதரவும் இல்லாமல் போயிருந்தால் இதை என்னால் எழுதியிருக்கமுடியாது. மற்றபடி, குற்றம், குறைகளுக்குப் பொறுப்பு நான் மட்டும்தான்.

மருதன்

நவம்பர் 2017

# புதிய உலகம்

ஐயோ கடலா என்று பயந்து அலறியவர்களின் எண்ணிக்கை அப்போதெல்லாம் மிக மிக அதிகம். அப்போதெல்லாம் என்றால் இயேசு கிறிஸ்து பிறப்பதற்கு முந்தைய காலத்தில். குதிரையில் போகிறேன், ஒட்டகத்தில் போகிறேன், நடந்து போகிறேன் ஆனால் கடல் மட்டும் வேண்டவே வேண்டாம் என்பார்கள். தங்கமும் வைரமும் கொட்டிக் கொடுக்கிறேன், வீடும் வாசலும் எழுதி வைக்கிறேன், பதவியும் பட்டமும் அள்ளித் தருகிறேன் என்று ஆசை காட்டினால்கூட மயங்க மாட்டார்கள். கடல் என்றால் அவ்வளவு பயம்.

ஏன்? பல காரணங்கள். நிலப் பிரதேசத்தில் பயணம் செய்வது எளிதானது. தேவைப்படும்போது தேவைப்பட்ட இடத்தில் பயணத்தை நிறுத்தி ஓய்வெடுக்கலாம். வழி தவறிவிடுவோமா என்று பயமில்லை. கண்ணில் படுபவர்களிடம் விசாரித்துக்கொள்ளலாம். தண்ணீர், உணவு என்று என்ன தேவைப்பட்டாலும் வழியில் கிடைக்கும். காய்ச்சல், கால் வலி, வயிற்று வலி என்று எந்தத் தொந்தரவு வந்தாலும் பயமில்லை. எங்காவது ஒரு வைத்தியர் இருப்பார். ஏதாவது ஒரு கசப்பு மருந்து தருவார். விழுங்கிவிட்டு அடுத்த வேலையைப் பார்க்க ஆரம்பித்துவிடலாம்.

கடலில் கொண்டு போன தண்ணீரும் உணவும் காலியாகிவிட்டால் நாமும் காலியாகவேண்டியதுதான். ஐயா, இந்த வழியில் போனால் அமெரிக்கா வருமா என்று யாரையும் கேட்க முடியாது. கிறிஸ்டோஃபர் கொலம்பஸ் இப்படித்தான் எங்கோ போகத் திட்டமிட்டு, கடைசில் வேறு எங்கோ போய்ச் சேர்ந்தார். தான் சென்றடைந்தது பிழையான முகவரி என்று இறுதிவரை அவருக்குத் தெரியவே இல்லை. இன்னும் சிலர் கிளம்பியதோடு சரி. அவர்கள் எங்கே போனார்கள், என்ன ஆனார்கள் என்று இன்றுவரை யாருக்கும் தெரியாது.

ஆனால் பாருங்கள், ஆரம்பிக்கும்போது நன்றாகத்தான் இருக்கும். ஜாலியாக எல்லாருக்கும் டாடா காட்டிவிட்டுதான் மூட்டை முடிச்சுகளோடு கிளம்பிப் போவார்கள். ஆடி ஆடி கப்பல் நகரத்

தொடங்கும்போது, ஜில்லென்று காற்று முகத்தில் அறையும்போது 'அடடா! இதுவல்லவா வாழ்க்கை!' என்றுதான் தோன்றும். ஆனால் நாள்கள் செல்லச் செல்ல, வாரங்கள் செல்லச் செல்ல, மாதங்கள் செல்லச் செல்ல எல்லாமே தலைகீழாக மாறிவிடும். இந்தக் கப்பல் நிற்கவே நிற்காதா என்று கோபமாக வரும். சொந்தக்காரர்களையும் நண்பர்களையும் அடுத்து எப்போது பார்க்கப் போகிறோம் என்று மனம் ஏங்கத் தொடங்கும். நிம்மதியாக நிலத்தில் இருப்பதை விட்டுவிட்டு ஏன்தான் இப்படி இதில் ஏறினோம் என்று வருத்தம் பொங்கும். காய்ச்சல், தலை வலி, வயிற்று வலி என்று எது வந்தாலும் மருந்து ஒன்றுதான். பல்லைக் கடித்துக்கொண்டு அமைதியாக இருக்கவேண்டும். பல் வலி வந்துவிட்டால் அதைக்கூடச் செய்யமுடியாது. போர்வையை இழுத்து மூடிக்கொண்டு படுத்துவிடவேண்டியதுதான்.

நிலத்தில் இருக்கும் வரை புயலோ மழையோ வெள்ளமோ வெயிலோ எது வந்தாலும் ஒதுங்கி நின்று வேடிக்கை பார்க்கமுடியும். ஆனால் கப்பலில் இது சாத்தியமில்லை. கொஞ்சம் மழை கனத்தாலும் கப்பல் அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் தள்ளாட ஆரம்பித்துவிடும். இது போதாதென்று உஷ் உஷ் என்று அடிக்கும் காற்று கப்பலைப் பிடித்துத் தள்ள ஆரம்பித்துவிடும். உன்னை ஒரு வழி செய்யாமல் விட மாட்டேன் என்று அலைகள் ஆள் உயரத்துக்கு எழும்பி நின்று பயமுறுத்தும். அவ்வளவும் ஒரே நேரத்தில் நடக்கும்.

நடு இரவில், நடுக்கடலில் இப்படி கப்பலும் இதயமும் போட்டிப்போட்டுக்கொண்டு நடுங்கும்போது, பாவம் பயணிகள் என்னதான் செய்வார்கள்? இந்தத் தொல்லைகளே வேண்டாம், வீட்டுக்குப் போய்விடலாம் என்று கப்பலை அப்படியே பின்பக்கமாகத் திருப்பி விர்ரென்று கரைக்கு வந்துவிடமுடிந்தால் நன்றாகத்தான் இருக்கும். பிரச்னை என்னவென்றால் இப்போது அந்தக் கப்பல் எங்கே நிற்கிறது என்று அவர்களுக்கே தெரியாது. எது கிழக்கு, எது மேற்கு, எது தென் கிழக்கு? கிளம்பிய துறைமுகம் எங்கே, போகவேண்டியது எங்கே? போய்ச் சேர எவ்வளவு அவகாசம் பிடிக்கும்? பக்கத்தில் ஒதுங்கிக்கொள்வதற்கு ஏதாவது இடம் இருக்கிறதா? உள்ளே காய்ச்சலில் படுத்திருப்பவர்களுக்கு எங்காவது மருந்து கிடைக்குமா? காலியாக இருக்கும் குடிநீர் தொட்டியை எப்படி நிரப்பிக்கொள்வது? பாழாய்போன இந்த மழை எப்போது நிற்கும்? இந்தப் பேய்க் காற்று எப்போது தணியும்? இந்த இரவு எப்போது விடியும்? ம்ஹூம், ஒருவருக்கும் தெரியாது.

நடப்பது நன்றாகவே நடக்கிறது, இனி நடப்பதும் நன்றாகவே நடக்கும் என்று ஆறுதல் சொல்லிக்கொண்டு நகத்தைக் கடித்தபடி உட்கார்ந்திருக்கவேண்டியதுதான். மழைக்கே சலிப்பு வந்து

அதுவாகவே நிறுத்திக்கொண்டால்தான் உண்டு. பிறகு ஒரு நாள் திடீரென்று சூரியனின் ஒளி தெரியும். அப்போது பார்க்கவேண்டுமே இந்தப் பயணிகளை! ஆடிப்பாடி கொண்டாடத் தொடங்கிவிடுவார்கள். பாடவே தெரியாதவர்கள்கூடச் சத்தம்போட்டு என்னென்னவோ பாட ஆரம்பித்துவிடுவார்கள்.

இதோ கரை வந்துவிடத்தான் போகிறது என்று ஒட்டுமொத்த கப்பலும் கனவு காண ஆரம்பித்துவிடும். கரை வந்துவிட்டால் தாவிகுதித்து இறங்கி அங்கும் இங்கும் ஓடி மகிழலாம். நிறைய தண்ணீர் எடுத்து தாகம் தீரத் தீரக் குடிக்கலாம். நிச்சயம் அந்தப் புதிய இடத்தில் நிறைய மரங்கள் இருக்கும். வகை வகையாகப் பல நிறங்களில் பல சுவைகளில் பழங்கள் இருக்கும். ஆசை தீரச் சாப்பிடலாம். மானும் மீனும் பறவையும் இருக்கும். வேட்டையாடி சுட்டுச் சாப்பிடலாம். போட்டுக்கொண்டிருக்கும் ஆடையை மாற்றி நன்றாகத் துவைத்து காயப்போடலாம்.

அந்தப் புதிய இடத்தில் நிச்சயம் நிறைய தங்கம் இருக்கும். மலை மலையாக வைரம் இருக்கும். விலை மதிக்க முடியாத இன்னும் என்னென்னவோ கற்களும் மணிகளும் இருக்கும். எல்லாவற்றையும் பங்கு போட்டுப் பிரித்துக்கொள்ளலாம். கையோடு கொண்டுவந்திருக்கும் பைகளில் போதும் போதும் என்னும் அளவுக்கு நிரப்பிக்கொள்ளலாம். பிறகு வந்த வழியே கிளம்பி மகிழ்ச்சியாக வீடு போய்ச் சேர்ந்துவிடலாம். அப்புறம்?

அப்புறமென்ன? ஏழையாகக் கப்பல் ஏறி கிளம்பிப் போனவர்கள் இப்போது பெரும் செல்வந்தர்களாக இருப்பார்கள். புதிய வீடு வாங்கலாம். இல்லை, இல்லை மாளிகையே கட்டலாம். தோட்டம் போடலாம். அந்தத் தோட்டம் முழுக்க தங்கத்தால் வேலி போடலாம். மனைவி, குழந்தைகள், அப்பா, அம்மா, நண்பர்கள் எல்லாரும் பெருமிதமாகப் பார்ப்பார்கள். இவர் யார் தெரியுமா? மிகப் பெரிய கடல் பயணி என்று ஊரே கொண்டாடும். மரியாதை, அங்கீகாரம், பதவி, பொருள் அனைத்தும் கிடைக்கும்.

இந்தக் கனவோடுதான் பலர் கப்பல் ஏறினார்கள். இந்தக் கனவோடுதான் புதிய இடங்களைத் தேடத் தொடங்கினார்கள். இந்தக் கனவோடுதான் கடும் குளிரையும் காய்ச்சலையும் தாங்கிக்கொண்டார்கள். வீட்டை மறந்து, புறப்பட்ட நாட்டை மறந்து ஏதோ ஒரு நம்பிக்கையில் மிதந்துகொண்டே இருந்தார்கள். வாரக் கணக்கிலோ மாதக் கணக்கிலோ அல்ல, ஆண்டுக்கணக்கில் கடலே கதி என்று கிடந்தார்கள்.

பலர் தங்கள் வாழ்நாள் முழுவதையும் கடலில் கழித்து முடித்தார்கள். இருந்தாலும் பெரும்பாலானோரின் கனவுகள் நிறைவேறவேயில்லை.

பல கப்பல்கள் மழையிலும் வெள்ளத்திலும் சிக்கிக் காணாமல் போயின. கிளம்பிச் சென்றவர்கள் பல ஆண்டுகள் ஆகியும் திரும்பவேயில்லை என்பதை உணர்ந்ததும் நிலத்தில் இருந்தவர்கள் நம்பிக்கை இழந்தார்கள்.

நிலம்தான் பாதுகாப்பானது. நிலம் மட்டும்தான் நமக்கானது. புதிய இடம் என்று எதுவும் இல்லை. கப்பல் ஏறிச் சென்றால் தங்கமும் வைரமும் கிடைக்கும் என்பது பொய். கடல் ஆபத்தானது. அதற்குக் கருணையே இல்லை. அது மனிதர்களை விழுங்கிவிடுகிறது. பெரிய, பெரிய கப்பல்களைக்கூட விழுங்கி ஏப்பமிட்டு விடுகிறது. பேசாமல், நான் உண்டு என் வீடு உண்டு என்று இருந்துவிடவேண்டியதுதான். இப்படி நினைத்தவர்கள்தான் அதிகம்.

ஆனால் சிலர் மட்டும் நம்பிக்கையை இழக்கவேயில்லை. என்ன ஆபத்து வந்தாலும் சரி, நான் கப்பலைவிட்டு இறங்கப்போவதில்லை என்பதில் அவர்கள் உறுதியுடன் இருந்தனர். மழை, வெள்ளம், சூறாவளி, காய்ச்சல், குளிர் எதுவும் அவர்களைத் தடுத்து நிறுத்தவில்லை. போகாதே ஆபத்து என்று பலர் தடுத்தும் அவர்கள் கேட்கவில்லை.

நத்தையைப்போல் பாதுகாப்பாக ஓரிடத்தில் வாழ அவர்களுக்கு விருப்பமில்லை. பறவையைப்போல் சுதந்தரமாகப் பறந்து செல்ல விரும்பினார்கள். புதிய இடங்களை, புதிய வாய்ப்புகளை, புதிய உலகைக் கண்டுபிடிக்கவேண்டும் என்று அவர்கள் துடித்தார்கள். மழையும் இருளும் புயலும் உடல் உபாதைகளும் அவர்களை இம்சித்தன. மிகப் பெரும் சவால்களை, மிகப் பெரும் ஆபத்துகளை அவர்கள் தொடர்ந்து சந்திக்கவேண்டியிருந்தது. இருந்தும் அவர்கள் தங்கள் பயணத்தைத் தொடர்ந்தார்கள். புது உலகைக் கண்டுபிடித்தார்கள்.

# 1. வாஸ்கோ ட காமா

## இந்தியாவைக் கண்டுபிடித்த கதை

15-ம் நூற்றாண்டில் நான், நீ என்று பலரும் போட்டிப்போட்டுக்கொண்டு இந்தியாவைப் பற்றிக் கனவு கண்டுகொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவர் எஸ்டெவா ட காமா. இவர் ஒரு புகழ்பெற்ற ராணுவ வீரர். செல்வாக்கு மிக்கப் பிரமுகர். போர்ச்சுகல் நாட்டில் உள்ள சினீஸ் என்னும் இடத்தில் அவர் வசித்துவந்தார். தன் வாழ்நாளில் எப்படியாவது இந்தியாவுக்கு ஒரு வழி கண்டுபிடிக்கவேண்டும் என்று தொடர்ந்து முயற்சி செய்துவந்தார்.

அவருடைய மூன்றாவது மகன், வாஸ்கோ ட காமா. சின்ன வயதிலேயே வாஸ்கோ ட காமாவுக்குக் கடல் அறிமுகமாகிவிட்டது. மீன் பிடிக்கும் சிறிய படகுகளில் ஏறி வலம் வருவது அவருக்குப் பிடித்திருந்தது. கடல் அலைகளின் ஓயாத சத்தம் அவரை ஈர்த்துக்கொண்டே இருந்தது. அவருடைய ஆர்வத்துக்குத் தீனி போட கணிதமும் கப்பல் செலுத்தும் தொழில்நுட்பமும் கற்பிக்கப்பட்டன.

நாளடைவில் அவருக்கும் அப்பாவிடம் இருந்து இந்தியா போகும் கனவு தொற்றிக்கொண்டுவிட்டது. அப்படி அங்கே என்னதான் இருக்கிறது? அங்கே போவதற்கு ஏன் எல்லாரும் புதிய வழியைத் தேடுகிறார்கள்? அப்படியானால் பழைய வழி என்றொன்று இருக்கிறதா?

தேடத் தொடங்கினார். கிரீஸ், ரோம் போன்ற பல சாம்ராஜ்ஜியங்களுடன் இந்தியாவுக்கு வர்த்தக உறவுகள் இருந்ததால் அந்த நாடு செல்வத்தின் அடையாளமாக இருந்தது. தங்கம், பட்டு, வாசனைப் பொருள்கள், விலை மதிப்பற்ற ஆபரணக் கற்கள் என்று பலவற்றையும் இந்திய வணிகர்கள் ஐரோப்பிய சந்தைகளுக்குக் கொண்டுவந்து விற்பனை செய்துவந்தார்கள். இவர்கள் கொண்டு வந்திருப்பதே இவ்வளவு என்றால் அவர்கள் நாட்டில் இன்னும் என்னென்ன இருக்கும் என்று கணக்குப் போட்டுப் பார்த்து வியந்தது ஐரோப்பா.

இந்தியா பற்றி நிஜமாகவும் கற்பனையாகவும் பல கதைகள் உலவி

விடப்பட்டன. அவற்றையெல்லாம் கேட்டுக் கேட்டு வளர்ந்த ஐரோப்பியர்கள் இந்தியாவுக்குப் போவதைத் தங்கள் வாழ்நாள் லட்சியமாக வைத்துக்கொண்டார்கள். பிரச்னை, கனவில் அல்ல; போகும் வழியில்தான் இருந்தது.

இந்திய வணிகர்கள் ஐரோப்பாவுக்கு வருவதற்குப் பிரச்னைகள் எதுவும் இல்லை. ஆப்கனிஸ்தான், பெர்ஷியா, அரேபியா, எகிப்து, துருக்கி ஆகிய பகுதிகளைக் கடந்து நிலம் மார்க்கமாக அவர்கள் ஐரோப்பாவை வந்தடைந்தனர். சிலர் கடல் வழியாகவும் வந்தனர். அரபிக் கடல், செங்கடல், மத்தியத் தரைக்கடல் என்று அவர்களுக்கென்று ஒரு வழித்தடம் இருந்தது.

சிக்கல் என்னவென்றால் இந்த வழிகள் அனைத்தும் அப்போது அரபு நாடுகளின் கட்டுப்பாட்டில் இருந்தன. ஐரோப்பிய கிறிஸ்தவர்களுக்கும் அரபு முஸ்லிம்களுக்கும் இடையில் நீண்டகாலமாகவே பகை இருந்து வந்ததால் இந்த வழித்தடங்கள் ஐரோப்பியர்களுக்குத் தடை செய்யப்பட்டிருந்தன. ஓஹோ இதுதானா கதை, அப்படியானால் நானே புதிய வழியைக் கண்டுபிடிக்கிறேன் என்று முடிவெடுத்தார் வாஸ்கோ ட காமா.

கனவு காண்பதோடு நிறுத்திக்கொள்ளாமல் பயணத்தைத் தொடங்கினார். வரைபடங்களைச் சேகரித்து எடுத்துக்கொண்டார். திசை காட்டும் கருவிகளை எடுத்துக்கொண்டார். 8 ஜூலை 1497 அன்று போர்ச்சுகலின் தலைநகரம் லிஸ்பனில் இருந்து வாஸ்கோ ட காமா தனது முதல் இந்தியக் கடல் பயணத்தை ஆரம்பித்தார்.

மொத்தம் நான்கு கப்பல்கள். ஒன்றின் எடை என்ன தெரியுமா? 200 டன்கள். (1 டன் ஆயிரம் கிலோ). ஒவ்வொரு கப்பலுக்கும் பெயர் இருக்கிறது. கப்பலைச் செலுத்துபவர்களின் பெயர்களைப் போலவே கப்பல்களின் பெயர்களும் வரலாற்றில் பதிந்துவிடுகின்றன. வாஸ்கோ ட காமா பயணம் செய்த கப்பலின் பெயர் செயிண்ட் கேப்ரியல். இரண்டாவது கப்பலை அவர் சகோதரர் பாலோ ட காமா செலுத்தினார். மூன்றாவதில் பணியாளர்கள் இருந்தார்கள். நான்காவது சரக்குக் கப்பல். மொத்தம் 170 பேர் இந்த 4 கப்பல்களில் இருந்தார்கள். இவர்களில் மூன்று பேர் அனுபவம் மிக்க ஓட்டுநர்கள்.

முதலில் வாஸ்கோ ட காமா எல்லோருக்கும் தெரிந்த வழியில், பழக்கப்பட்ட வழித்தடத்தில் கப்பலைச் செலுத்தினார். பகல், இரவு, பகல் என்று நாள்கள் ஓடத் தொடங்கின. பொதுவாக இத்தகைய நீண்ட காலப் பயணங்களின்போது இடையிடையே ஓய்வு தேவைப்படும். அறிமுகமான நிலப்பகுதிகளில் சில நாள்கள் கரை ஒதுங்கி சில வேலைகளைச் செய்யவேண்டும்.

என்னென்ன வேலைகள்? சரக்குக் கப்பலில் குடிநீர் தீர்ந்திருந்தால் நிரப்பிக்கொள்ளவேண்டும். உணவு போதுமான அளவுக்கு இருக்கிறதா என்று பார்க்கவேண்டும். கையோடு கொண்டு வந்திருக்கும் சில பொருள்களைப் பண்டமாற்று செய்து வேறு நல்ல பொருள்கள் வாங்கிக்கொள்ளவேண்டும்.

வாஸ்கோ ட காமாவின் கப்பல்கள் ஒரு வார காலம் கேப் வர்டி என்னும் தீவுக் கூட்டத்தில் தங்கியிருந்தன. அடுத்து மிக நீண்ட ஒரு பயணத்தை அவர்கள் மேற்கொள்ளவேண்டும் என்பதால் இந்த ஓய்வு அவர்களுக்குத் தேவைப்பட்டது. பிறகு, அட்லாண்டிக் பெருங்கடல் பயணம் தொடங்கியது. நாள் கணக்கில், வாரக் கணக்கில் கப்பல் மிதந்துகொண்டே இருந்தது. தொடர்ந்து 90 நாள்கள், அதாவது 3 மாதங்கள் நிலமே கண்ணில் காணவில்லை. எங்கு திரும்பினாலும் கடல், கடல், கடல்.

குளிக்கமுடியாது. அதே பழைய உடைகளை மாறி மாறி பயன்படுத்திக்கொள்ளவேண்டும். துவைத்தால் காயாது. கடும் குளிர் வேறு. சரி, நிம்மதியாகச் சாப்பிடவாவது முடியுமா என்றால் அதிலும் சிக்கல்கள். ரொட்டியும் இறைச்சியும் கொஞ்சம் கொஞ்சமாகக் கெட ஆரம்பிக்கும். பிறகு அழுக ஆரம்பிக்கும். பூஞ்சைக் காளான் பிடித்துக்கொள்ளும். மூக்கை மூடிக்கொண்டு விழுங்கிவிடவேண்டியதுதான்.

உடல் மட்டுமல்ல உள்ளமும் சோர்வடைய ஆரம்பித்தபோது ஒரு வழியாகத் தென் ஆப்பிரிக்கா கண்ணில் பட்டது. 10,000 கி.மீ. கடந்த பிறகு ஒரு துண்டு நிலம்! இன்னும் இந்தியா வந்துவிடவில்லை என்றாலும் அதற்குள் வாஸ்கோ ட காமா ஒரு சாதனையைத் நிகழ்த்திவிட்டார். ஆம், இதற்கு முன்னால் இவ்வளவு நீண்ட ஒரு தொடர் பயணத்தை இடையில் எங்கும் நிற்காமல் வேறு யாரும் மேற்கொண்டதில்லை! பூமத்திய ரேகையைக் கடந்து, தெற்கு அட்லாண்டிக் பெருங்கடல் வழியே ஆப்பிரிக்கக் கரையை அவர்கள் தொட்டனர்.

இந்தச் சாதனையே அவர்களை மேலும் மேலும் போகத் தூண்டியது. இதோ, கையில் சிக்கும் இடத்தில்தான் இந்தியா என்று தனக்குள் சொல்லிக்கொண்டார் வாஸ்கோ ட காமா. மீண்டும் பயணம் தொடர்ந்தது. தெற்குப் பகுதியில் இருந்த நன்னம்பிக்கை முனை என்னும் பகுதியை வாஸ்கோ ட காமா சுற்றி வந்தார். ஆப்பிரிக்காவை ஒட்டியபடி கீழிருந்து அப்படியே மேலே, மேலே செல்லத் தொடங்கினார்கள். இனி அவர்கள் பழக்கப்பட்ட பாதையில் இருந்து பிரிந்து புதிய வழியைக் கண்டுபிடித்தாக வேண்டும்.




வாஸ்கோ ட காமா

கென்யாவில் உள்ள மாலிண்டி என்னும் இடத்தை அடைந்தனர். அங்கே ஆட்சி புரிந்துகொண்டிருந்த ஒரு சுல்தான் நல்லவிதமாக வாஸ்கோ ட காமாவை வரவேற்று உபசரித்தார். அனுபவம் வாய்ந்த ஓர் அரபு மாலுமி இந்தியா போவதற்குச் சில ஆலோசனைகளை வழங்கினார்.

வாஸ்கோ ட காமா இந்தியப் பெருங்கடலில் இப்போது முன்னேறிக்கொண்டிருந்தார். உடன் வந்தவர்கள் பலர் துவண்டுவிட்டனர். போதும் திரும்பிடலாம் என்றார்கள் பலர். நோய் வசப்பட்டுப் பலர் உயிரிழந்தனர். ஓரிடத்தில் சரக்குக் கப்பல் முழுமையாகத் தீப்பற்றி எரியத் தொடங்கியது. கொண்டுவந்திருந்த உணவுப் பொருள்கள் அனைத்தும் வீண். வாஸ்கோ ட காமா பயணத்தை நிறுத்தவே இல்லை.

அரபிக் கடல் வந்தது. வாஸ்கோ ட காமாவின் கண்கள் கரையைத் தேடிக்கொண்டே இருந்தன. இந்த வழி சரியானதுதானா? இதுவரை யாரும் சாதிக்காததை என்னால் சாதிக்க முடியுமா? அல்லது இதுவும் வீண் முயற்சியாகப் போய்விடுமா?

ஒருவழியாக மே 20, 1498 அன்று கரை கண்ணில் பட்டது. இது எந்த இடம்? நாம் எங்கே இருக்கிறோம்? போய் விசாரித்துவிட்டு வா என்று சிலரை அனுப்பி வைத்தார் வாஸ்கோ ட காமா. அவர்கள் திரும்பி வரும்வரை வானத்தைப் பார்த்தபடி அமைதியாக இருந்தார். சிறிது நேரத்தில் அவர்கள் திரும்பினார்கள். இந்த இடத்தின் பெயர் கோழிக்கோடு. கேரளாவில் இருக்கிறதாம்! ஆம், நாம் இந்தியா வந்துவிட்டோம்!

வாஸ்கோ ட காமாவின் முகத்தில் முதல் முறையாகப் புன்னகை மலர்ந்தது. கப்பலை விட்டு இறங்கினார். முதல் முறையாக இந்தியாவில் தன் கால்களைப் பதித்தபோது நிச்சயம் அவர் உடல் சிலிர்த்திருக்கவேண்டும். உடல் மட்டுமா, உள்ளமும்தான்.

- வாஸ்கோ ட காமா பிறந்தது 1460-ம் ஆண்டு என்று சிலரும் 1469-ம் ஆண்டு என்று வேறு சிலரும் சொல்கிறார்கள். இந்தியப் பயணத்துக்குப் பிறகு அவருடைய வாழ்க்கை அடியோடு மாறியது. தனது முதல் பயணத்தில் அவர் மொத்தமாக 300 தினங்களைக் கடலில் கழித்து முடித்தார்.

- ஆரம்பத்தில் அவருக்கு இந்தியாவில் நல்ல வரவேற்பே கிடைத்தது. ஆனால் விரைவில் உறவு சீர்கெட்டது. திரும்பிச் செல்லும்போது அவருடைய கப்பல்களில் வந்தவர்களில் பாதிப் பேர் பல்வேறு காரணங்களால் இறந்துவிட்டார்கள்.

- இரண்டாவது இந்தியப் பயணத்தின்போது 20 ஆயுதம் தாங்கிய கப்பல்களை அவர் கொண்டுவந்தார். 1524-ம் ஆண்டு மூன்றாவது இந்தியப் பயணத்தின்போது கொச்சிக்கு வந்தார். இந்த முறை அவர் உடல் பலவீனமடைந்திருந்தது. அதே ஆண்டு டிசம்பர் 25-ம் தேதி அவர் உயிரிழந்தார்.

- கப்பல் வழியாக ஆப்பிரிக்காவைச் சுற்றிவந்து இந்தியாவை அடைந்த முதல் ஐரோப்பியர் வாஸ்கோ ட காமா. இவரின் இந்த வழித்தடத்தைப் பயன்படுத்தி போர்ச்சுகல் பல முன்னேற்றங்களை அடைந்தது.

- இந்தியா ஒரு காலனி நாடாக மாறுவதற்கு இந்தப் பயணம் உதவியது. ஆறே ஆண்டுகளில், 1505-ம் ஆண்டு போர்ச்சுகல் இந்தியாவில் காலனியாதிக்கத்தைத் தொடங்கி வைத்தது. 1947-ம் ஆண்டு இந்தியா பிரிட்டனிடம் இருந்து சுதந்தரம் பெற்ற பிறகும்

1961-ம் ஆண்டு வரை போர்ச்சுகலின் காலனிகள் இந்தியாவில் நீடித்தன.

## 2. செங் ஹே

### இளவரசரும் கைதியும்

சீனாவின் தலைநகரம் பெய்ஜிங்கில் 2008-ம் ஆண்டு ஒலிம்பிக்ஸ் போட்டிகள் நடைபெற்றன. அப்போது நடத்தப்பட்ட தொடக்க விழாவில் குறிப்பாக ஓர் அணிவகுப்பு அனைவருடைய கவனத்தையும் ஈர்த்தது. நீல ஆடை உடுத்திய மாலுமிகள் ஆளுக்கொரு துடுப்பை ஏந்தியபடி நடைபோட்டுச் சென்றனர். ராணுவ வரிசைபோல் அவர்கள் நடந்து சென்றபோது, அவர்கள் கையில் இருந்த துடுப்புகள் ஒன்றுசேர்ந்து ஓர் அழகிய கப்பலாக மாறியது.

செங் ஹே என்னும் தலைசிறந்த மாலுமியை நினைவுபடுத்துவதே அந்த அணிவகுப்பின் நோக்கம். யார் இந்த செங் ஹே? சீனர்கள் மறந்தே போன ஒரு முக்கியமான மாலுமி அவர். சீனாவே மறந்துவிட்ட பிறகு மற்ற நாட்டு மக்கள் மட்டும் அவரை நினைவிலா வைத்திருக்கப் போகிறார்கள்?

வரலாற்றில் இது ஒரு முக்கியப் பிரச்னை. மாவீரர்கள் என்று சொன்னால் அலெக்சாண்டரும் நெப்போலியனும்தான் நினைவுக்கு வருவார்கள். மாலுமிகள் என்றால் கொலம்பஸ், வாஸ்கோ ட காமா, மார்கோ போலோ. ஆனால் வரலாறு மிகவும் பெரியது, ஆழமானது. சில பிரபலங்களை மட்டும் தெரிந்துவைத்திருந்தால் போதாது. எவ்வளவு ஆழமாகத் தேடுகிறோமோ அவ்வளவுக்கு அவ்வளவு அற்புதமான புதையல்கள் நமக்குக் கிடைக்கும்.

செங் ஹே அப்படியொரு புதையல்தான். சீனாவின் தெற்குப் பகுதியில் உள்ள யுனான் என்னும் இடத்தில் 1371-ம் ஆண்டு அவர் பிறந்தார். பிறக்கும்போது அவருக்கு வைக்கப்பட்ட பெயர் மா ஹே. அவர் பெற்றோர் ஹுய் என்னும் சீன முஸ்லிம் இனக் குழுவைச் சேர்ந்தவர்கள் என்பதால் முகமது நபியை நினைவுகூரும் வகையில் மா என்னும் முதல் பெயரை வைத்தார்கள். மா ஹேவின் அப்பா, தாத்தா இருவருமே ஹஜ் பயணம் மேற்கொண்டவர்கள்.

மா ஹே பிறந்தபோது யுனான் பகுதியை யுவான் பரம்பரையினர் ஆண்டுவந்தனர். இவர்கள் மங்கோலியர்கள். அப்போதெல்லாம்

சீனாவில் இப்படித்தான் மன்னர்கள் பரம்பரை பரம்பரையாக ஆண்டுவந்தனர். ஒருவர் பதவிக்கு வந்துவிட்டால் அவர் மகன், அவருடைய மகன், அந்த மகனின் மகன் என்று ஒரு வம்சமே பல நூறு ஆண்டுகள் ஆளும். பிறகு அவர்களை வீழ்த்திவிட்டு இன்னொருவர் ஆட்சிக்கு வருவார். அவர் பரம்பரை அடுத்த சில நூறாண்டுகளுக்குச் சீனாவை ஆளத் தொடங்கிவிடும். மா ஹேவின் தாத்தாவின் தாத்தா மங்கோலிய அரசரிடம் பணியாற்றியவர். அவருடைய முதாதையர்களில் சிலர் மங்கோலியர்களாக இருந்திருக்கலாம். எனவே மா ஹே ஒரே சமயத்தில் மங்கோலியராகவும் சீனராகவும் இஸ்லாமியராகவும் இருந்தார்.

மா ஹேவுக்குப் பத்து வயதாகும்போது பக்கத்து மிங் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் யுவான் பரம்பரையினர் மீது போர் தொடுத்தனர். அந்தப் போரில் மா ஹேவின் அப்பாவும் கலந்துகொண்டு மிங் வீரர்களுக்கு எதிராகப் போரிட்டார். ஆனால் பாவம், இறந்துபோனார். யுவான் பரம்பரையும் தோற்றுப் போனது. அத்தோடு மங்கோலியர்களின் நீண்ட ஆட்சி முடிவுக்குவந்தது. நீண்ட இடைவெளிக்குப் பிறகு சீனாவைச் சீனர்களே ஆளத் தொடங்கினார்கள். ஆம், மிங் என்பவர்கள் ஹன் சீனர்கள்.

பத்து வயது மா ஹேவுக்குத் தன்னைச் சுற்றி என்ன நடக்கிறது என்றே புரியவில்லை. ஏன் திடீரென்று நம் நிலத்தில் யாரோ புகுந்துவிட்டார்கள்? ஏன் அப்பா போருக்குச் செல்லவேண்டும்? ஏன் அவர் கொல்லப்படவேண்டும்? இனி எனக்கு என்னாகும்? மா ஹே கலக்கத்தில் இருந்த சமயம் பார்த்து ஒரு மிங் ஜெனரல் நெருங்கி வந்தார். அவரைப் பார்த்ததும் மா ஹேவுக்கு உடல் முழுக்க அச்சம் பரவிவிட்டது. அப்பாவைப்போல் என்னையும் கொல்லத்தான் வருகிறார்களோ என்று நினைத்து ஓடத் தொடங்கினார். அந்த ஜெனரலும் பின்னாலேயே துரத்தி வர, ஓடோடிச் சென்ற மா ஹே சட்டென்று அருகிலுள்ள ஓர் ஆற்றில் குதித்துவிட்டார்.

ஆனால் ஜெனரலுடன் வந்திருந்த வீரர்கள் உடனே பாய்ந்து மீட்டுவிட்டார்கள். உண்மையில் அவர்கள் துரத்தி வந்தது மா ஹேவைக் கொல்ல அல்ல. ஏதோ ஒரு மங்கோலியரின் இருப்பிடத்தைப் பற்றி விசாரிப்பதுதான் அவர்கள் நோக்கம். இப்படித் திடீரென்று நீரில் பாய்வார் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. சரி வா என்று கையோடு மா ஹேவை அள்ளிப்போட்டுக்கொண்டு சென்றுவிட்டார்கள்.

ஆனால் ஒரு பத்து வயது கைதியை வைத்துக்கொண்டு என்ன செய்வதென்று ஒருவருக்கும் தெரியவில்லை. பிறகு யாரோ ஒருவர் சொன்னார். நம் இளவரசரிடம் கொண்டுபோய் விட்டுவிட்டால்

என்ன? இவனை என்ன செய்வதென்று அவர் முடிவெடுத்துக்கொள்ளட்டும். நாம் ஏன், நம் மண்டையை உடைத்துக்கொள்ளவேண்டும்?

அதுவும் சரிதான் என்று உடனே மா ஹேவை இழுத்துச் சென்று, சூ டி என்னும் மிங் இளவரசரிடம் கொண்டுசென்று சேர்த்தார்கள். அவருக்கும் முதலில் குழப்பமாகத்தான் இருந்தது. வயதில் பெரிய கைதியாக இருந்தால் அந்த வேலை செய், இந்த வேலை செய் என்று சொல்லி எங்காவது அனுப்பிவைக்கலாம். திருதிருவென்று விழித்தபடி நிற்கும் இந்தச் சிறுவனை என்ன செய்வது?



செங் ஹே

ஆனால் நாள்கள் செல்லச் செல்ல மா ஹேவின் தூய்மையான, நல்ல உள்ளம் இளவரசருக்கு மிகவும் பிடித்துப் போனது. இளவரசர் என்று

பெயர்தானே தவிர, ஒரு பெரிய பிரதேசம் அவர் ஆட்சியில் இருந்தது என்றாலும் (பின்னர் இதுவே பெய்ஜிங் ஆக மாறியது!) அவருடைய வயது 21 மட்டுமே. அதனால் ஒரு கட்டத்தில் பணியாளரைப்போல் அல்லாமல் கிட்டத்தட்ட நட்பாக மா ஹேவுடன் அவர் பழகத் தொடங்கிவிட்டார்.

மா ஹே தன் இனிமையான சுபாவத்தால் விரைவில் அரண்மனையில் நல்ல பெயர் வாங்கிவிட்டார்! மிங் ஆட்சி பற்றிய அவர் பயமும் விலகிப்போனது. ஒரு நாட்டை இன்னொரு நாடு ஆக்கிரமிப்பதும், ஒரு மன்னரை இன்னொரு மன்னர் பகையாளியாகக் கருதுவதும் இயல்புதான் என்று அவர் கற்றுக்கொண்டார். மிங் இளவரசர் தன்மீது அக்கறையுடன் இருப்பதைக் கண்டு மா ஹே மகிழ்ந்துபோனார். அப்பாவை இழந்துவிட்டாலும் ஓர் அன்பான மனிதரின் ஆதரவு கிடைத்ததே என்று ஆறுதல் பட்டுக்கொண்டார்.

ஒரு நாள் இளவரசர் மா ஹேவை அழைத்தார். ‘இங்கே பார், மா ஹே! நீ இப்படிச் சின்னச் சின்ன அரண்மனை வேலைகள் மட்டும் செய்துகொண்டிருப்பது நல்லதல்ல. நீ நிறைய கற்றுக்கொள்ளவேண்டும். உன் திறமைகளை வளர்த்துக்கொள்ள வேண்டும். எனக்குப் பணியாளர்கள் தேவையில்லை. ஒரு நல்ல ஆலோசகராக உன்னால் மாற முடியுமா?’

ஓ... அதற்கென்ன என்று உடனடியாக ஒப்புக்கொண்டார் மா ஹே. பிறகுதான் தெரிந்தது, அது எவ்வளவு கடினமான வேலை என்று. ஓர் இளவரசருக்கு ஆலோசகராக இருக்கவேண்டுமானால் கல்வி கற்கவேண்டும். போர் பயிற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். சீனாவைப் பற்றியும் அக்கம் பக்கம் உள்ள நாடுகளைப் பற்றியும் சில அடிப்படைகள் தெரிந்துகொள்ளவேண்டும். இதெல்லாம் முடிகிற காரியமா?

எல்லாப் பெரிய பயணங்களும் முதல் அடியில் இருந்தே தொடங்குகின்றன. இது ஒரு சீனப் பழமொழி. மா ஹே துணிச்சலுடன் அனைத்துச் சவால்களையும் ஏற்றுக்கொண்டார். பொதுவாகப் பணம் படைத்தவர்களுக்கு மட்டுமே கிடைக்கும் கல்வி இவருக்கும் போதிக்கப்பட்டது. போர்ப் பயிற்சிகளும் எடுத்துக்கொண்டார். எதைக் கற்றுக்கொள்ளவேண்டும் என்றாலும் அதிக முனைப்பும் தீவிரமும் இருந்ததால் விரைவிலேயே மா ஹே மற்ற மாணவர்களிடம் இருந்து தனித்து தெரிய ஆரம்பித்தார். இளவரசருக்கும் மகா திருப்தி. மா ஹேவின் திறமைகளை அங்கீகரித்து, அவரைப் பல வேலைகளில் நம்பிக்கையுடன் ஈடுபடுத்தினார்.

இதைக் கண்டு பொறுக்க முடியாமல் அரண்மனையில் இருந்த மற்றவர்கள் இளவரசரிடம் மெல்ல முணுமுணுத்தார்கள்.

‘மதிப்புக்குரிய இளவரசரே! எங்களைப் போல் எவ்வளவோ திறமைசாலிகள் உங்களுக்கு உதவுவதற்குக் காத்திருக்கிறோம். எங்களை நீங்கள் பயன்படுத்திக்கொள்ளலாமே. போயும் போயும் ஒரு கைதியிடம் நீங்கள் இவ்வளவு நம்பிக்கை வைக்கலாமா? மா ஹே என்னும் பெயரே விநோதமாக இருக்கிறது, பாருங்கள். அவன் நம்மைப் போல ஹன் வம்சத்தைச் சேர்ந்தவன் இல்லை. வேறு மதத்தைச் சேர்ந்தவன். மேலும் அவன் பாதி மங்கோலியன். மங்கோலியர்கள் நம் எதிரிகள் என்பது உங்களுக்குத் தெரியாதா?’

இளவரசர் உடனே முடிவெடுத்துவிட்டார். எல்லோருக்கும் முன்னால் மா ஹேவை வரவழைத்தார். பிறகு அறிவித்தார்.

‘மா ஹே, உன் பெயரை இத்தோடு மறந்துவிடு. இனி நீ செங் ஹே என்று அழைக்கப்படுவாய்! இனி செங் ஹேவை யாரும் அந்நியராகப் பார்க்க மாட்டார்கள் என்று நம்புகிறேன்.’

அரண்மனையில் இருப்பவர்களுக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. காரணம் செங் என்பது இளவரசர் மிகவும் விரும்பி மதிக்கும் அவருடைய குதிரையின் பெயர். அப்படியானால் இந்த செங் ஹேவையும் இளவரசர் மதிக்கிறார், விரும்புகிறார் என்று பொருளா? ஐயோ, நாமே இப்படி வாயைவிட்டு மாட்டிக்கொண்டுவிட்டோமே! இன்னும் இந்தச் செங் ஹே என்னென்ன செய்யப் போகிறாரோ!

அவர்கள் பயந்ததைப் போலவே நடந்தது. செங் ஹேவும் இளவரசரும் சேர்ந்து சீனாவின் எதிர்காலத்தையே மாற்றியமைக்கக்கூடிய திட்டங்களை வகுக்க ஆரம்பித்தார்கள்.

*

மிங் இளவரசர் சூ டி 1402-ம் ஆண்டு அதிகாரத்தைக் கைப்பற்றி சீனாவின் மன்னரானார். தன் நாட்டில் பல முக்கியமான மாற்றங்களை மேற்கொள்ள அவர் விரும்பினார். சீனப் பெருஞ்சுவரை விரிவாக்கவேண்டும் என்பது அவர் கனவு. அதற்கான வேலைகள் உடனடியாகத் தொடங்கின. தலைநகர் பெய்ஜிங்கில் புதிய அரண்மனை உள்ளிட்ட சில கட்டுமான வேலைகளையும் தொடங்கிவைத்தார். சீனாவின் வர்த்தக உறவுகளை வலுவாக்க விரும்பிய அவர், உலக நாடுகளுடன் தொடர்புகொள்ளவும் விரும்பினார்.

இங்கேதான் செங் ஹேவின் உதவி அவருக்குத் தேவைப்பட்டது. பிற நாடுகளோடு தொடர்பு கொள்ளவேண்டுமானால் அந்த நாடுகளுக்குச் செல்வதற்குக் கப்பல்கள் வேண்டும் அல்லவா? செங் ஹேவிடம் அந்தப் பொறுப்பை ஒப்படைத்தார் சூ டி.

‘செங் ஹே, எனக்குப் பல கனவுகள் இருக்கின்றன. அவை நிறைவேற

வேண்டுமானால் நிறையப் பணம் தேவை. வியாபாரம் பெருகினால்தான் பணம் அதிகரிக்கும். முந்தைய மன்னர்கள் அனைவரும் இரும்புத் திரை போட்டுச் சீனாவை இழுத்து மூடி வைத்திருந்தார்கள். எனக்கு அது பிடிக்கவில்லை. கதவைத் திறந்து நாம் உலகைப் பார்க்கவேண்டும். உலகமும் சீனாவைப் பார்க்கவேண்டும். அதற்கு உன் உதவி தேவைப்படுகிறது.'

'எனக்குப் பெயர் வைத்து, புதிய அங்கீகாரத்தை அளித்தவர் நீங்கள். உங்களுக்காக என்ன வேண்டுமானாலும் செய்வேன், சொல்லுங்கள்!' என்றார் செங் ஹே.

'உடனடியாகச் சில கப்பல்களை நீ உருவாக்கவேண்டும். பிறகு உலகம் முழுவதும் சென்று சீனாவின் பெருமைகளைச் சொல்லவேண்டும். புதிய நாடுகளுடன் வர்த்தக உறவுகளை வளர்த்துக்கொள்ள வேண்டும். உன்னால் முடியுமா?'

ஓ முடியும் என்றார் செங் ஹே. கப்பல் என்பது கடலில் செல்லும் ஒரு வாகனம் என்று மட்டும்தான் அப்போது அவருக்குத் தெரியும். அதனாலென்ன, கற்றுக்கொண்டால் போச்சு என்று களத்தில் குதித்தார். தந்தையை இழந்து, கைதியாகக் கைப்பற்றப்பட்டு, அரண்மனையில் பல ஆண்டுகள் பணியாளராக ஓடித் திரிந்த ஓர் இளைஞருக்கு இவ்வளவு பெரிய பொறுப்பை ஒப்படைத்தால் சும்மா இருக்க முடியுமா?

கப்பல் கட்டுவதில் தேர்ச்சி மிக்கப் பணியாளர்களையும் தொழில்நுட்ப வல்லுனர்களையும் தேடிப்பிடிக்கத் தொடங்கினார். பத்து, நூறு, ஆயிரம் என்று திறமை வாய்ந்த ஆள்கள் சேர்ந்துவிட்டனர். இருந்தும் செங் ஹேவுக்குத் திருப்தியில்லை. மேலும் மேலும் ஆள்களைத் தேடிக்கொண்டே இருந்தார்.

இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த அரண்மனை அதிகாரிகள் சந்தேகத்துடன் கேட்டார்கள்: 'செங் ஹே, நீ எவ்வளவு கப்பல்கள் உருவாக்கப் போகிறாய்?'

'நீங்களே சொல்லுங்களேன். உலகம் முழுக்கச் சீன வணிகர்கள் சுற்றிவர எவ்வளவு கப்பல்கள் தேவைப்படும்?'

'மிஞ்சி போனால் சில நூறு.'

'ஓ, அப்படியானால் ஆயிரக்கணக்கான கப்பல்கள் வேண்டும்' என்றார் செங் ஹே.

மன்னரின் எதிர்பார்ப்பை நிறைவேற்றுவதற்கு அரண்மனையில் பலர் இருக்கிறார்கள். மன்னராலும் நினைத்துப் பார்க்க முடியாததைச் செய்து முடிப்பதுதானே எனக்குப் பெருமை? நூறு கப்பல் இருந்தால்

நன்றாக இருக்கும் என்று அவர் நினைத்தால் ஆயிரம் கொண்டுவந்து நிறுத்த வேண்டாமா? இதுதான் செங் ஹேவின் கணக்கு.

இரவு, பகலாக ஆயிரக்கணக்கான பணியாளர்கள் கடுமையாகப் பணியாற்றி கப்பல்களை உருவாக்கத் தொடங்கினார்கள். செங் ஹே அருகிலிருந்து ஒவ்வொன்றையும் மேற்பார்வையிட்டார். மெல்ல மெல்ல உள்ளுக்குள் அலை அடிக்க ஆரம்பித்தது. இந்தக் கப்பலில் நான் உட்கார்ந்தால் எப்படி இருக்கும்? கடலில் மிதந்து சென்றால் எப்படி இருக்கும்? என்னால் பல தேசங்களைக் காண முடியுமா? என் மன்னருக்கும் என் நாட்டுக்கும் பெருமை சேர்க்க முடியுமா?

மொத்தம் 3,500 புத்தம் புதிய கப்பல்களை செங் ஹே உருவாக்கி முடித்தபோது சீனாவே வாயைப் பிளந்து ஆச்சரியப்பட்டது. அவற்றில் ஒன்பது கப்பல்களைத் தனக்கே தனக்கென்று பிரத்தியேகமாக வடிவமைக்கச் சொன்னார் செங் ஹே. ஒவ்வொன்றும் 400 அடி நீளம் கொண்டது. பிற்காலத்தில் கிறிஸ்டபர் கொலம்பஸ் பயன்படுத்திய கப்பலின் நீளம் வெறும் 85 அடி மட்டுமே என்பதை வைத்துப் பார்த்தால் 400 அடி என்பது எவ்வளவு பெரியது என்பது புரியவரும்.

அதற்குப் பிறகு செங் ஹே தாமதிக்கவில்லை. உற்சாகத்துடன் பயணத்தைத் தொடங்கினார். முதல் பயணம் 1405-ம் ஆண்டு தொடங்கி இரண்டு ஆண்டுகள் நீடித்தது. எதையுமே பிரமாண்டமாக மட்டுமே யோசிக்கத் தெரிந்தவர் அல்லவா? மொத்தம் 62 கப்பல்கள் செங் ஹேவுடன் பயணம் செய்தன. பின்னால் 200 கப்பல்கள் அணிவகுத்துவந்தன. பாதுகாப்புக்கு 28,000 ஆயுதம் தாங்கிய வீரர்கள் இருந்தனர்.

முதல் பயணமே இந்தியாவுக்குதான். தெற்குச் சீனக் கடலில் இருந்து கிளம்பி இந்தியப் பெருங்கடல் வழியே கோழிக்கோடை அடைந்தார். அளவு கடந்த உற்சாகத்துடன் பயணத்தை ரசித்தார் செங் ஹே. கடல், கப்பல் இரண்டும் அவரை வசீகரித்துவிட்டன. இனி நிலமே வேண்டாம், கடலில் தூங்கி, கடலில் சாப்பிட்டு, ஒவ்வொரு நாள் கண் விழிக்கும்போதும் ஒரு புதிய பிரதேசத்தைக் காணவேண்டும் என்று நினைத்துக்கொண்டார்.

சீனா திரும்பும் வழியில் சுமத்திரா தீவில் ஒரு பெரிய கொள்ளைக்கூட்டம் செங் ஹேவின் கப்பல்களைத் தாக்கியது. செங் ஹேவின் வீரர்கள் விடுவார்களா? ஐயாயிரம் கொள்ளையர்களைக் கொன்றுவிட்டு அவர்களுடைய தலைவனைச் சிறைபிடித்து பயணத்தைத் தொடர்ந்தார்கள்.

அரண்மனைவாசிகளும் மக்களும் ஆர்வத்துடன் செங் ஹேவை

வரவேற்றார்கள். பிறகு விசாரித்தார்கள். எவ்வளவு பணம் கிடைத்தது? என்னென்ன பிரதேசங்களைக் கைப்பற்றினீர்கள்?

‘கைப்பற்றுவதா? நான் போனது அதற்காக இல்லை நண்பர்களே. இதோ நிறையப் பரிசுப் பொருள்கள் கிடைத்திருக்கின்றன, பார்க்கிறீர்களா?’

ஒருவருக்கும் ஆர்வமில்லை. 3,500 கப்பல்களை உருவாக்கி, 28,000 வீரர்களை ஏற்றிச் சென்று, குதிரைகளையும் ஆயுதங்களையும் சுமந்துசென்று, இரண்டு ஆண்டுகள் சுற்றி வந்து, இந்தியாவுக்குச் சென்று சில பரிசுப் பொருள்களை மட்டும் கொண்டுவரும் ஓர் ஏமாளியை நீங்கள் இதற்கு முன்னால் பார்த்திருக்கிறீர்களா?

‘பயணம் என்றால் புதிய இடங்களைக் கைப்பற்றியே தீரவேண்டுமா என்ன? நான் சென்றது என் மகிழ்ச்சிக்காக. என் மன்னரின் மகிழ்ச்சிக்காக. இது ஒரு தொடக்கம் மட்டுமே. தொடர்ந்து பல நாடுகளுக்குச் செல்லத்தான் போகிறேன். ஆனால் எதையும் ஆக்கிரமிக்கப் போவதில்லை’ என்று உறுதியாகப் பதிலளித்தார் செங் ஹே.

சொன்னதைப் போலவே மேலும் ஐந்து பயணங்களை மேற்கொண்டார் செங் ஹே. பாரசீக வளைகுடாவுக்குச் சென்றார். கிழக்கு ஆப்பிரிக்காவின் துறைமுகத்தைப் பார்வையிட்டார். ஒவ்வொரு பகுதியும் எந்தெந்த வகைகளில் எல்லாம் தன் நாட்டிடம் இருந்து வேறுபடுகிறது என்பதை ஆராய்ந்தார். எந்த நாட்டையும் அடிமைப்படுத்தவேண்டும் என்றோ கைப்பற்றவேண்டும் என்றோ சீனாவின் ஆட்சியைப் பரப்பவேண்டும் என்றோ அவர் நினைக்கவில்லை. சில அழகிய பொருள்களை மட்டும் கொண்டுவருவார்.

‘என் அருமை சீனர்களே, ஆப்பிரிக்காவில் இருந்து நான் கொண்டுவந்துள்ள அதிசயத்தைப் பாருங்கள்’ என்று அலறுவார். மக்களும் ஓடோடி வருவார்கள். மிகுந்த ஆர்ப்பாட்டத்துடன் கப்பலில் இருந்து பெரிய பெட்டியை இறக்குவார். அதில் மூடியுள்ள துணியைச் சட்டென்று விலக்குவார்.

மக்கள் வாய் பிளப்பார்கள். ஐயோ, இதென்ன பேயா பூதமா? இவ்வளவு பெரிய கால்களா? ஆ, அந்தக் கழுத்தைத்தான் பாருங்களேன்? ஒடிந்து விழுந்து விடாதா? எங்காவது கிளையில் எசகுபிசகாக மாட்டிக்கொண்டு இழுத்துவிட்டதா? இதன் பெயர் என்ன? இது நம்மைக் கடித்து விடுமா? கடித்தால் நம் கழுத்தும் இப்படி நீண்டு விடுமா? ‘பயப்படாதீர்கள், இது சாதுவான பிராணி. இதன் பெயர் ஒட்டகச் சிவிங்கி’ என்று பெருமையாக அறிவிப்பார் செங்

ஹே. வரிக் குதிரையையும் இப்படித்தான் மக்கள் அதிசயத்துடன் பார்த்தார்கள்.

அவர் காலத்தில் மட்டுமல்ல, இன்றும்கூட பலர் வியப்புடன் திரும்பத் திரும்பக் கேட்கிறார்கள். புதிய இடங்கள் பார்த்தார். சீனாவின் கதவைத் திறந்து உலகைத் தரிசித்தார். விதவிதமான விலங்குகளைக் கொண்டுவந்தார். எல்லாம் சரி, செங் ஹேவால் சீனாவுக்கு என்ன பலன் ஏற்பட்டது? செங் ஹே நினைத்திருந்தால் இந்தியப் பெருங்கடலை ஆண்டிருக்கலாம். ஏன் செய்யவில்லை?

ஏனென்றால் செங் ஹே என்ன செய்ய விரும்பினாரோ அதை மட்டுமே செய்தார். அதற்கு மேல் அவர் ஆசைப்படவில்லை. பிரம்மாண்டமான கப்பல்கள் கட்ட நினைத்தார். கட்டினார். கடலில்தான் வாழவேண்டும் என்று விரும்பினார். அதுவே நடந்தது. அவர் இறந்ததும்கூட கடலில்தான்.

செங் ஹே எதையும் கைப்பற்றாவிட்டால் என்ன? உலகையே தன் பல்வேறு திறன்களால் சீனா இன்று கைப்பற்றி வைத்திருக்கிறது இல்லையா?

- ஜெங் ஹோ, சான் போ போன்ற பெயர்களிலும் அவர் அழைக்கப்பட்டார்.
- செங் ஹேவுக்கு ஒரு மூத்த சகோதரர், நான்கு சகோதரிகள் இருந்தனர். அவருடைய அப்பா, தாத்தா இருவரும் தங்களுடைய மத நம்பிக்கைகளைப் பின்பற்றி ஹஜ் பயணம் மேற்கொண்டார்கள். ஆனால் பல பகுதிகளுக்குச் சென்றிருந்தபோதும் செங் ஹேவால் இறுதிவரை ஹஜ் செல்ல முடியவில்லை.
- செங் ஹே ஒரு திருநங்கை ஆவார். அதனால் அவரைப் படிக்க வைக்கக்கூடாது, அவரை நம்பக்கூடாது என்று பலர் பிரசாரம் செய்தனர். மிங் இளவரசர் எதையும் காதில் போட்டுக்கொள்ளவில்லை.
- சீன வரலாற்றில் திருநங்கைகளில் உயர் பதவி, அங்கீகாரம், மரியாதை மூன்றையும் பெற்றவர் செங் ஹே மட்டும்தான்.
- 400 அடி நீளக் கப்பலை செங் ஹேவால் உருவாக்கியிருக்க முடியாது என்றுதான் ஆய்வாளர்கள் நீண்ட காலம் நம்பிவந்தனர். ஆனால் 36 அடி கொண்ட துடுப்பு ஒன்று, 1962-ல் யாங்ஸி ஆற்றில் கண்டெடுக்கப்பட்டபோது ஆச்சரியப்பட்டுப் போனார்கள். துடுப்பே இவ்வளவு பெரியது என்றால் நிச்சயம் கப்பல் 400 அடிக்கு இருந்திருக்கும் என்று நம்பத் தொடங்கினார்கள்.

- சூ டி இறந்த பிறகு புதிதாக வந்த மன்னருக்குக் கடல் பயணத்தில் ஆர்வம் இல்லாததால் சீனா மீண்டும் தன் கதவைப் பூட்டிக்கொண்டது. செங் ஹேவுக்குப் பிறகு நீண்ட காலத்துக்கு எந்தப் பெரிய பயணத்தையும் சீனர்கள் மேற்கொள்ளவில்லை.
- செங் ஹே 1433-ல் இறந்தார் என்று சிலரும், இல்லை 1435-ல் தான் இறந்தார் என்று வேறு சிலரும் சொல்கிறார்கள்.
- சீனாவில் அவருடைய கல்லறை அமைந்துள்ளது. ஆனால் அது காலியாகவே இருக்கிறது. காரணம் அவர் அடக்கம் செய்யப்பட்டது கடலில்!
- ஒருவேளை செங் ஹே தான் கண்ட இடங்களை எல்லாம் கைப்பற்றியிருந்தால் என்ன ஆகியிருக்கும்? சீனாவும் உலகமும் எப்படி எல்லாம் மாறியிருக்கும்? இன்றளவும் வரலாற்று ஆசிரியர்கள் இந்தக் கற்பனை கேள்விகளை எழுப்பி விதவிதமாக விவாதித்துக்கொண்டுதான் இருக்கிறார்கள்.

# 3. மார்கோ போலோ

## பயணிகளின் பயணி

இத்தாலி என்பது இப்போது ஒரு நாடு. ஆனால் கிட்டத்தட்ட 750 ஆண்டுகளுக்கு முன்னால் மார்கோ போலா வாழ்ந்த காலத்தில் அது பல்வேறு நகரங்களாகத் தனித்தனியே ஆளப்பட்டுவந்தது. அதில் ஒரு நகரம் வெனிஸ். நகரம் என்பதைவிடச் சின்னச் சின்ன தீவுகளைக் கொண்டிருக்கும் (மொத்தம் 118) ஒரு தொகுப்பு என்று வெனிஸை அழைக்கலாம். இரண்டு தெரு தள்ளி போகவேண்டுமானால்கூட படகில்தான் போயாகவேண்டும்.

பெரும்பாலானோர் இரண்டு, மூன்று தெருக்களைத் தவிர வேறு எதையும் பார்த்ததுகூட இல்லை. பார்த்தது மட்டுமல்ல, கேள்விப்பட்டதும்கூட இல்லை. ஐரோப்பா, ஆசியா, ஆப்பிரிக்கா தவிர வேறு கண்டங்கள் இருப்பதே இத்தாலியர்களுக்குத் தெரியாது. உலகம் எவ்வளவு பெரியது? அதில் என்னென்ன நாடுகள், நகரங்கள் இருக்கின்றன? அங்கே எப்படிப்பட்ட மக்கள் வசிக்கிறார்கள்? எதுவும் அவர்களுக்குத் தெரியாது. வெளியில் போனால்தானே தெரியும்?

முதல் முறையாக மார்கோ போலோவின் குடும்பத்தினருக்கு ஓர் ஆச்சரியமூட்டும் வாய்ப்பு வந்தது. வேலையாகச் சீனாவுக்குப் போகிறேன் வருகிறீர்களா என்று ஒரு நண்பர் அவர்களை அணுகி கேட்டபோது, போலோ குடும்பத்தினர் ஒப்புக்கொண்டனர். மார்கோ போலோவை மட்டும் உறவினர்களிடம் பத்திரமாக விட்டுவிட்டு அவர்கள் கிளம்பிப் போனார்கள். இப்போது சீனாவின் தலைநகராக இருக்கும் பெய்ஜிங் அப்போது மங்கோலியாவில் இருந்தது.

மங்கோலியர்களின் அரசரான புகழ்பெற்ற குப்லாய் கானின் அரண்மனை அங்கே இருந்தது. நீண்ட பயணத்துக்குப் பிறகு போலோ குடும்பத்தினர் அரண்மனையை அடைந்தனர்.

ஐரோப்பிய நாட்டில் இருந்து வந்திருந்த போலோ குடும்பத்தினரை குப்லாய் கானுக்குப் பிடித்துவிட்டதால் அவர்களை அரசாங்கப் பிரதிநிதிகளாக அவர் நியமித்தார். உடனே ஒரு பணியையும் கொடுத்தார்.

ரோம் நகருக்குச் சென்று புனித போப்பைச் சந்தித்து கணிதம், வானியல் உள்ளிட்ட விஷயங்களைக் கற்ற 100 கத்தோலிக்கர்களைப் பெற்றுக்கொண்டு சீனா திரும்புங்கள். அப்படியே பலவிதமான நோய்களைத் தீர்க்கும் அற்புத ஆற்றல் கொண்ட புனித எண்ணெயை நிரப்பிக்கொண்டு வாருங்கள்.

சரி ஆகட்டும் என்று போலா குடும்பத்தினர் ஐரோப்பா திரும்பினர். குப்லாய் கான் கேட்டு அனுப்பியதில் எண்ணெய் மட்டுமே கிடைத்தது. ஆனால் அவர்கள் கேட்காத இன்னொன்றையும் அவர்கள் இந்த முறை கொண்டு போனார்கள். 17 வயது மார்கோ போலோ! அவ்வளவு தூரம் உன்னால் கடலில் போக முடியாது மகனே, நீ வீட்டிலேயே பத்திரமாக இரு என்று ஆயிரம் முறை சொல்லிப் பார்த்தார் அப்பா நிகோலோ. கேட்கவில்லை. வெனிஸில் இருந்து அட்ரியாடிக் கடலை அடைந்து அங்கிருந்து மத்தியத்தரைக்கடல் செல்லவேண்டும். இந்த இரண்டையும் கடப்பதற்குள் இரண்டாயிரம் ஆபத்துகள் வரும். பேசாமல் வீட்டில் இருந்துவிடேன் என்று அறிவுறுத்திப் பார்த்தார். மார்கோ போலோ தெளிவாகச் சொல்லிவிட்டார். எனக்கு வீடு போதாது. நான் முழு உலகையும் பார்க்கவேண்டும்.



மங்கோலிய உடையில் மார்கோ போலோ

1271-ம் ஆண்டு மார்கோ போலோவின் (1254- 1324) முதல் பெரும் கடல் பயணம் ஆரம்பமானது. நிகோலோவின் முதல் பெரும் கவலை கடல் பிசாசு. அட்ரியாடிக் கடலைத் தொடும்போது நிச்சயம் நீரில் இருந்து கடல் பிசாசு தோன்றும் என்று அவருக்கு உறுதியாகத் தெரியும். அப்படி வந்துவிட்டால் தன் மகனை மட்டும் திரும்பவும் வெனிஸ் அனுப்பிவைப்பதற்கு அவர் ஏற்பாடு செய்திருந்தார். தான் சொல்லிக் கேட்காத மார்கோ போலோ நிச்சயம் கடல் பிசாசைக் கண்டு மிரண்டுவிடுவான் என்று அவர் நினைத்தார்.

கடல் பிசாசு இரண்டு கப்பல் அளவு தடிமனாக இருக்கும் என்று சிலர் சொல்லியிருந்தார்கள். இல்லை, பத்து கப்பல் உயரம் என்றார்கள் வேறு சிலர். பல கப்பல்களை அப்படியே பிடித்து அது முழுமையாக விழுங்கியிருக்கிறதாம். சில நேரம், கப்பலை விட்டுவிட்டு

மனிதர்களை மட்டும் பிடித்துச் சாப்பிடுமாம். இதுவும் போரடித்தால் விளையாட்டாகக் கப்பலைக் கவிழ்த்துவிட்டுத் தத்தளிக்கும் மனிதர்களைக் கண்டு ரசிக்குமாம். நான் பார்த்திருக்கிறேன், அதற்குப் பத்து கைகள் என்று சிலர் சாட்சி சொன்னார்கள். அதன் வால் மலைப்பாம்பைவிட நீளமானது, நான் பார்த்திருக்கிறேன் என்றார்கள் சில மூத்த மாலுமிகள்.

இந்தக் கதைகளை நிகோலோ மட்டுமல்ல அனைத்து இத்தாலிய வர்த்தகர்களும் முழுமையாக நம்பி ஏற்றுக்கொண்டிருந்தார்கள். பயந்து பயந்து கப்பலைச் செலுத்தினார்கள். கடலில் ஒரு சின்ன அசைவு தென்பட்டாலும் ஐயோ கடவுளே என்று அலறினார்கள். இருட்டில் ஏதாவது உருவம் தெரிந்தால், இதோ வந்தேவிட்டது பிசாசு என்று பயத்தில் கடலில் குதித்தார்கள்.

மார்கோ போலோவும் ஆர்வத்துடன் பார்த்துக்கொண்டேதான் இருந்தார். ஒரு பிசாசுகூட காணோம்! ஆனால் வழி முழுக்கப் பல அதிசயங்கள் தோன்றின. காஸ்பியன் கடலுக்கு அருகில் முதல்முறையாக ஓர் எண்ணெய் கிணற்றைக் கண்டார். அதிலிருந்து கிடைக்கும் எண்ணெயைக் கொண்டு விளக்கு ஏற்றலாம் என்று அங்கிருப்பவர்கள் சொன்னபோது அவரால் நம்பவே முடியவில்லை. அவருக்குத் தெரிந்தவரை மெழுகு, விறகு போன்றவற்றைப் பயன்படுத்தியே வெளிச்சத்தை ஏற்படுத்தினார்கள். மிருகங்கள் அல்லது காய்கறிகளில் இருந்தே எண்ணெயை எடுக்க முடியும் என்று அவர் நினைத்திருந்தார். தண்ணீர் போல் எண்ணெய் கிணறு இருக்குமா என்ன?

கடல், கடலுக்கு அருகிலுள்ள நிலப்பகுதி, மீண்டும் கடல் என்று ஆமை வேகத்தில் போலோவின் பயணம் நகர்ந்தது. பாரசீகத்தில் (இப்போது இரான்) திடீரென்று சலசலப்பு ஏற்பட்டபோது பிசாசு கும்பலாக வந்துவிட்டதாக அனைவரும் அஞ்சினார். வந்தவர்கள் கொள்ளைக்காரர்கள் என்பதால் அவர்களிடம் போராடி தப்பினார்கள். கடல் பயணத்தை நிறுத்திவிட்டு நிலம் வழியாகச் செல்லத் தொடங்கினார்கள். ஆப்கனிஸ்தானில் வளைந்த கொம்புகளுடன்கூடிய ஆடுகளைப் பார்த்து திகைத்து நின்றார் மார்கோ போலோ. அது என்ன உயிரினம் என்றே அவருக்குத் தெரியவில்லை. பின்னாள்களில் இவை போலோ ஆடுகள் என்றே பெயர்பெற்றன.

சிங்கத்தை மிரட்சியுடன் வேடிக்கை பார்த்தார். பல விசித்திரமான காய்கறிகளையும் பழ வகைகளையும் பார்த்தார். தாலிகான் என்னும் பகுதியில் உள்ள மலைகளில் உப்பு நிறைந்திருக்கிறது என்பதைக் கேள்விப்பட்டு அங்கே போனார். அப்படியே திகைத்து

நின்றுவிட்டார். உலகம் முழுவதும் உயிர் வாழ்வதற்கு இந்த உப்பு போதும் என்று நினைத்துக்கொண்டார். தங்கம்போல் உப்புக்கு அப்போது அதிக மவுசு இருந்தது. வழக்கமாக ஒரு வாரம் மட்டுமே தாக்குப்பிடிக்கக்கூடிய இறைச்சியை மாதக்கணக்கில் பதப்படுத்தி பாதுகாக்க உப்பு பயன்பட்டதால்தான் இந்த மதிப்பு.

இப்படி வழி நெடுகிலும் அவர் பார்த்த ஒவ்வொன்றும் அவருக்கு அதிசயமாகவே இருந்தது. கோபி பாலைவனத்தையும் மத்திய ஆசியப் பகுதிகளையும் கடந்து சீனாவை நெருங்குவதற்குள் 4 ஆண்டுகள் கழிந்துவிட்டன. வெனிஸில் இருந்து கிளம்பிய 17 வயது மார்கோ போலோ குப்லாய் கானின் அரண்மனைக்குள் நுழைந்தபோது 21 வயது ஆகிவிட்டது.

அப்போது இது சாதாரணம்தான். மார்கோ போலோ பிறந்ததும் நிகோலோ தன்னுடைய வர்த்தகத் தேவைகளுக்காகப் பயணம் செய்யத் தொடங்கிவிட்டார். எல்லாவற்றையும் முடித்துக்கொண்டு அவர் மீண்டும் ஊருக்குத் திரும்பியபோது மார்கோ போலோவுக்கு 15 வயது ஆகியிருந்தது. மார்கோ போலா தன் தந்தையை முதல்முறையாக அப்போதுதான் பார்த்தார்!

குப்லாய் கானின் பிரமாண்டமான அரண்மனை, மங்கோலியர்களின் மாறுபட்ட வாழ்க்கை முறை என்று அனைத்தும் மார்கோ போலோவைக் கவர்ந்தன. பிசாசுக்குப் பயந்து வீட்டில் தங்கியிருந்தால் இதையெல்லாம் பார்த்திருக்க முடியுமா? வெனிஸ் மட்டும்தான் உலகம் என்று நினைத்திருந்தால் இந்த அனுபவங்கள் எல்லாம் கிடைத்திருக்குமா? இப்போது நிம்மதியா மார்கோ போலோ, உன் பயணம் முடிந்துவிட்டதா என்றார் நிகோலோ. இல்லை, இப்போதுதான் அப்பா தொடங்கியிருக்கிறது என்றார் மார்கோ போலோ.

உண்மையில் நடந்ததும் அதுதான். குப்லாய் கானுக்கு மார்கோ போலேவை ரொம்பவும் பிடித்துவிட்டதால் சீனா தொடங்கி பல்வேறு நாடுகளுக்குப் பல்வேறு பணிகளுக்காக அவர் மார்கோ போலோவை அனுப்பிக்கொண்டே இருந்தார். அடுத்த 16 ஆண்டுகளுக்கு மார்கோ போலோ தொடர்ச்சியாகப் பயணம் செய்துகொண்டே இருந்தார். கடல், நிலம் இரண்டையும் அவர் விட்டுவைக்கவில்லை. ஐயோ அங்கே போகாதீர்கள், பத்து தலை பூதம் இருக்கிறது என்று யாராவது எச்சரித்தால், அதைப் பார்ப்பதற்காகத்தான் ஐயா போய்க்கொண்டிருக்கிறேன் என்று பதிலளித்தார்.

வாஸ்கோ ட காமாவைப் போல் மார்கோ போலோ புதிய கடல் வழித்தடம் எதையும் கண்டுபிடிக்கவில்லை. ஆனால் வாஸ்கோ ட காமா, கொலம்பஸ் தொடங்கிப் பல பிற்கால மாலுமிகளுக்கு ஒரு

வழிகாட்டியாகவும் நம்பிக்கை நட்சத்திரமாகவும் இருந்தார் மார்கோ போலோ. இரண்டு தெரு தள்ளி எதையும் பார்த்திராத வெனிஸ் நகரில் இருந்து முதல் நபராக 11,000 மைல் பயணம் மேற்கொண்டு சீனாவுக்குச் சென்று திரும்பினார். ஐரோப்பாவின் புகழ்பெற்ற பயணியாகவும் மாறிப் போனார்.

பல இடங்களுக்குத் துணிச்சலாகச் சென்று வந்தது மட்டுமல்ல அவர் சாதனை. தான் கண்ட, கேள்விப்பட்ட அத்தனை அதிசயக் கதைகளையும், அற்புதக் காட்சிகளையும் அவர் கவனமாகவும் விரிவாகவும் எழுதி வைத்தார். எந்தப் புதிய இடத்துக்குப் போனாலும் அந்த இடத்தின் பெயர், அங்கு வசிக்கும் மக்களின் மொழி, நடை உடை பாவனைகள், அவர்கள் பேசிக்கொண்ட கதைகள் என்று அனைத்தையும் குறித்து வைத்துக்கொண்டார். பிற்காலத்தில் இந்தப் புத்தகத்தைப் படித்துதான் பலர் சீனாவைப் பற்றியும் ஆசியாவைப் பற்றியும் அறிந்துகொண்டார்கள். அந்த வகையில் மார்கோ போலோ ஒரு பயணி மட்டுமல்ல; பயணிகளின் பயணி.

மார்கோ போலோவின் பயணக் குறிப்புகளைப் படித்த பலர் அதில் வரும் பல விஷயங்களை நம்பவில்லையாம். கற்பனையில் மட்டுமே இதெல்லாம் நடக்கும், உண்மையில் நீங்கள் இங்கெல்லாம் போனீர்களா, இதையெல்லாம் பார்த்தீர்களா என்று அவரிடம் ஒருமுறை கேட்டார்களாம்.

70 வயது தாத்தாவாக இருந்த மார்கோ போலோ அவர்களைப் பார்த்து சிரித்தாராம். இதிலுள்ள அனைத்தும் உண்மை. மேலும், நான் பார்த்ததில் பாதியைத்தான் எழுதியிருக்கேன்! முழுக்க எழுத நேரமில்லை!

அப்படி மார்கோ போலோ என்னதான் எழுதியிருக்கிறார்? ஏன் அதைச் சிலர் வியந்து பாராட்டுகிறார்கள்? ஏன் சிலர் அதனை நம்ப மறுக்கிறார்கள்? மார்கோ போலோவின் அதிசயக் குறிப்புகளில் இருந்து சில சுவாரஸ்யமான பகுதிகளைப் பார்க்கலாம்.

*

ஒரு நாள் பேரரசர் குப்லாய் கான் தன் தூதுவரை அழைத்து ஒரு கடிதத்தைக் கொடுத்தார். இதைப் பத்து ஊருக்குத் தள்ளியுள்ள அரண்மனையில் சேர்த்துவிட்டு மதியத்துக்குள் என்னைப் பார் என்றார். மார்கோ போலோ விழித்தார். இரண்டு தெரு கடப்பதற்குள் மதியம் ஆகிவிடும். பத்து ஊருக்கு அப்பால் போய்விட்டுத் திரும்புவதாவது?

மார்கோ போலோ குழம்பி முடிப்பதற்குள் மதியம் ஆகிவிட்டது. அதற்குள் அந்தத் தூதரும் திரும்பிவிட்டார். மார்கோ போலோவால்

ஆச்சரியத்தை அடக்கவே முடியவில்லை. பிறகு அதிகாரிகள் அவருக்கு விளக்கினார்கள். மன்னரிடம் இருந்து கடிதத்தை வாங்கிக்கொண்டு முதல் தூதர் குதிரையில் பாய்ந்து செல்வார். சிறிது தூரம் சென்றதும் அங்கே இன்னொரு தூதர் இருப்பார். அவரிடம் அதைக் கொடுத்துவிடுவார். இரண்டாவது தூதர் அதை மூன்றாவது தூதரிடம் சேர்ப்பார்.

இப்படி ஒவ்வொருவரும் இன்னொருவரிடம் விரைவாகச் சேர்த்துக்கொண்டே வருவார்கள். மொத்தம் எவ்வளவு தூதர்கள் தெரியுமா? சில மைல்களுக்கு ஒருவர் என்ற கணக்கில் கிட்டத்தட்ட 10,000 பேர். ஒவ்வொருவரும் சில மைல் பயணம் செய்தால் போதும். ஆயிரம் மைல் என்றாலும் சிரமமில்லாமல் அதி விரைவில் ஒரு செய்தியைக் கொண்டுசென்று சேர்த்துவிடமுடியும்.

இன்னொரு நாள், தன் வாழ்நாளில் முதல் முறையாகக் காகிதத்தில் தயாரிக்கப்பட்ட பணத்தைத் திருப்பித் திருப்பிப் பார்த்து ஆச்சரியமடைந்தார் மார்கோ போலோ. ஊதினாலே கிழிந்துவிடும் போலிருக்கும் இதுவா பணம்? இதே போன்ற வெள்ளை காகிதத்தில் மக்கள் ஏதேதோ எழுதிக்கொண்டிருப்பதையும் அவர் பார்த்தார். ஐரோப்பாவில் 1600கள் வரை யாரும் காகிதத்தைப் பயன்படுத்தியதில்லை. பணம் என்றால் நாணயம். ஏதாவது எழுதவேண்டும் என்றால் கண்ணில் படும் மிருகத்தைப் பிடித்து, கொன்று, அதன் தோலை உரித்து, காய வைத்து, பதப்படுத்தி கீறி கீறி எழுதவேண்டும்.

மற்றொரு நாள், சீனாவில் பயணம் செய்துகொண்டிருந்தபோது பூமியே பிளந்துவிடுவதைப்போல் ஒரு சத்தம்! அதிர்ந்து, நடுங்கி இரு காதுகளையும் பொத்திக்கொண்டு நடுங்க ஆரம்பித்துவிட்டார் மார்கோ போலோ. வானம் கீழே உடைந்து விழுந்துவிட்டது என்றே அவர் நினைத்தார். இத்தோடு பூமி தொலைந்தது என்று நம்பினார். ஆனால் சில நிமிடங்களில் சத்தம் ஓய்ந்துவிட்டது. வானமெல்லாம் உடையவில்லை ஐயா, சும்மா கொஞ்சம் பட்டாசு வெடித்தோம் அவ்வளவுதான், பயப்படாதீர்கள் என்று சீனர்கள் அவர் முதுகைத் தட்டிக் கொடுத்து சமாதானப்படுத்தினார்கள். ஒரு குழந்தைக்குத் தெரிந்திருப்பதுகூட இவருக்குத் தெரியலையே என்று சிரித்திருக்கவும் கூடும்.

ரொம்ப பயந்த சுபாவம் போலும் என்று நினைத்துவிடவேண்டாம். குப்லாய் கான் பக்கத்து நாட்டின் மீது போர் தொடுக்கப் போகிறார் என்பது தெரிந்ததும் நானும் வருகிறேன் என்று துள்ளிக் குதித்துக் கிளம்பிவிட்டார். ஈட்டி, வில், அம்பு என்று அனைத்து ஆயுதங்களும் தயார் செய்யப்பட்டன. ஆயிரக்கணக்கான வீரர்கள் இரும்புக் கவசம்

அணிந்தபடி நடை போட்டார்கள். மார்கோ போலோவுக்கு தனி குதிரை வண்டி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அப்போதுதான் கவனித்தார், போர் வீரர் மட்டுமல்ல அவர் ஏறி அமர்ந்திருந்த குதிரையும் கவசம் அணிந்திருந்தது!

இன்னொன்றையும் கவனித்தார். ஒரு குதிரை வீரனுக்குக் காயம் ஏற்பட்டுவிட்டால் அவனுக்கு அல்ல, அவன் குதிரைக்கே முதலில் சிகிச்சை அளிக்கப்பட்டது. மனிதனைவிட ஒரு விலங்குக்கு இவ்வளவு முக்கியத்துவம் ஏன் கொடுக்கவேண்டும்? வீரர்கள் பயன்படுத்திய வில், அம்பு ஆயுதமும் மார்கோ போலோவை மிகவும் கவர்ந்தன. ஐரோப்பாவிலும் இது இருந்தது என்றாலும் சீன அம்புகள் பல மடங்கு வேகத்துடன் சீறிப் பாய்வதை அவர் உணர்ந்தார்.

இன்னொரு விசித்திரமான போர் முறையையும் பார்த்தார். உண்டிகோல் தெரியுமல்லவா? ஆங்கில ஙு வடிவில் இருக்கும் இதைக் கொண்டு கற்களைக் குறிபார்த்து எறியமுடியும். குப்லாய் கானின் வீரர்கள் மிகப் பிரம்மாண்டமான உண்டிகோலைத் தயார் செய்யத் தொடங்கினார்கள். பெரிய மரக் கிளைகள், பட்டைகள், சக்கரங்கள் ஆகியவற்றை இணைத்து இதனை உருவாக்கினார்கள். இதற்காகவே சில தொழில்நுட்ப வல்லுனர்கள் வந்திருப்பதை ஆச்சரியத்துடன் பார்த்தார் மார்கோ போலோ. பத்து ஆள் உயரத்துக்கு இருந்த அந்தப் பிரம்மாண்ட உண்டிகோலை மங்கோனெல் என்று அழைத்தனர். எதற்காக இவ்வளவு பேர் பல மணி நேரம் செலவிழத்து இப்படியொரு விளையாட்டுப் பொருளை உருவாக்குகிறார்கள் என்று யோசித்தார் போலோ.

விரைவில் விடை தெரிந்தது. சில வீரர்கள் வரிசையாகப் பாறாங்கற்களைத் தூக்கிவந்தார்கள். ஒவ்வொன்றாக அந்த உண்டிகோலில் வைத்து இழுத்துவிட்டார்கள். விஷ்க்கென்று பெரும் சத்தத்துடன் வானில் பறந்து சென்ற ஒவ்வொரு கல்லும் இடிபோல் எதிரிகள் மீது விழுந்தது. சில சமயம், எரியும் நெருப்பு பந்துகளை இப்படி எறிந்தார்கள். இறந்துபோன மிருகங்களின் உடல்களையும் இப்படி வீசியெறிந்தார்கள். அதிலிருந்து நோய் தொற்றும் கிருமிகள் பரவி எதிரிகளை அழித்துவிடுமாம்!

எந்தெந்த போரில் குப்லாய் கான் வென்றார், எங்கே தோற்றார் என்பதை ஆராய்ந்தபோது மார்கோ போலோவுக்கு ஒரு முக்கியமான உண்மை தெரியவந்தது. செடிகள், மரங்கள் கொண்ட பசுமையான இடங்களில் உறுதியான வெற்றி கிடைத்தது. பாலைவனப் பகுதிகளிலும் வறண்ட நிலங்களிலும் தோல்வியே கிடைத்தது. ஏன் இப்படி என்பது பிறகுதான் தெரிந்தது. பசுமையான பிரதேசங்களில் குதிரைகளால் வயிறுமுட்ட சாப்பிடமுடிந்தது. அதனால் உற்சாகமாக

வீரர்களைச் சுமந்து சென்றன. வறண்ட நிலங்களில் மேய்வதற்கு எதுவும் இல்லை. எனவே உற்சாகம் இல்லை. வீரர்கள் தோற்றார்கள். ஏன் குதிரையைக் குழந்தையைப்போல் பாசத்துடன் கவனித்துக்கொண்டார்கள் என்பது போலோவுக்குப் புரிந்தது.

மார்கோ போலோ தன் வாழ்நாளின் மிக முக்கியமான பாடமொன்றைக் கற்றுக்கொண்டார். பயணம் அனுபவங்களை அளிக்கிறது. அனுபவங்கள் அறிவை வளர்க்கின்றன. எனவே ஆழமான அதிக அறிவு வேண்டுமென்றால் ஆழமாகவும் அகலமாகவும் பயணம் செய்யவேண்டும். திபெத், பர்மா, ஜப்பான் என்று மார்கோ போலோ தனது பயணத்தைத் தொடர்ந்தார். இந்த ஆசியப் பகுதிகள் அவரை வெகுவாகக் கவர்ந்தன.

1292 வாக்கில் இந்தியாவை நோக்கி நகரத் தொடங்கினார் மார்கோ போலோ. அறுபது அறைகளைக் கொண்ட பெரும் வணிகக் கப்பல் அது. மொத்தம் 300 பேர் உடன் வந்தனர். கோரமண்டல் கரை வழியாக இன்றைய தஞ்சாவூர் பகுதியை அடைந்தார் மார்கோ போலோ. அப்போது ஆட்சியில் இருந்தவர்கள் பாண்டியர்கள். மங்கோலியர்களைப் போலவே தமிழ் மக்களையும் விநோதமாகவே பார்த்தார் மார்கோ போலோ. மன்னர்கள், சாமானியர்கள் என்று பலரும் தயங்காமல் தரையில் அமர்ந்திருப்பதைப் பார்த்து தானும் அவ்வாறு அமர்ந்து பார்த்து மகிழ்ச்சியடைந்தார்.

தமிழகத்தில் அவருக்குப் பிடிக்காத ஒரு விஷயம் வெயில். பிழியப் பிழிய வியர்வை பொங்குவதையும் தலை முதல் கால் வரை கொளுத்துவதையும் அவரால் சகித்துக்கொள்ளவே முடியவில்லை. ஒருவேளை அப்படியே நம்மை எரித்துச் சாம்பலாக்கிவிடுமோ என்று அஞ்சினார். அந்த வெயிலிலும் மன்னர்கள் உடல் முழுக்க, சிறியதும் பெரியதுமாகப் பல ஆபரணங்கள் அணிந்திருந்தனர். அவற்றின் எடையை மனதில் கணக்குப் போட்டுப் பார்த்தபோது மயக்கமே வந்தது மார்கோ போலோவுக்கு. உலகிலேயே மிகவும் வசதியானவர்கள் தமிழகத்தில்தான் வாழ்கிறார்கள் என்று குறித்து வைத்துக்கொண்டார்!

அரிசி என்று வெள்ளையாக ஏதோ ஒன்றை வெறும் கையால் அள்ளி எடுத்து வாயில் போட்டு மெல்வதைப் பார்த்து தானும் அவ்வாறே செய்துபார்த்தார். கையில் எவ்வளவு வந்தது, வாயில் எவ்வளவு சென்றது, கீழே எவ்வளவு விழுந்தது என்று அவர் எழுதவில்லை. ஒரு பாத்திரத்தை எடுத்து தூக்கிப் பிடித்துக்கொண்டு ஆவென்று வாயைத் திறந்து நீர்வீழ்ச்சி போல் வாயில் கொட்டுகிறார்கள். உதடுகளில் படாமல் இப்படித் தூக்கிப் பிடித்து குடிப்பது விசித்திரமாக இருக்கிறது. எதற்காக இப்படியொரு மேஜிக்கை செய்கிறார்கள்

என்று வியந்தார் மார்கோ போலோ.

மனிதனின் தலையளவு உள்ள ஒரு பெரிய காயை எல்லோரும் சாப்பிடுவதைக் கண்டு ரசித்தார். அது தேங்காய்.

இப்படி அவரால் புரிந்துகொள்ள முடியாத மேலும் பல விநோதங்கள் தமிழகத்தில் இருந்தன. வாயில் ஏதோ இலையை மடக்கிப் போட்டு மெல்கிறார்கள். சில நேரம் அதில் ஏதேதோ தடவிக்கொண்டு சாப்பிடுகிறார்கள். நல்ல சகுனம், கெட்ட சகுனம் என்று ஏதேதோ சொல்கிறார்கள். எருமை மாட்டை வணங்குகிறார்கள். மாட்டின் சாணத்தை வீடு முழுக்கப் பூசுகிறார்கள். ஆண் சாமியோடு சேர்த்து பெண் சாமிகளும் கோயில்களில் இருக்கிறார்கள். இரவு நேரங்களில் இந்தக் கடவுள்கள் எல்லாம் உயிர் பெற்று எழுந்து உலாவுமாம். என்னென்னவோ கத்தி கத்தி பாடுகிறார்கள்.

பெரிய இலையைப் பறித்து வந்து அதில் உணவு சாப்பிடுகிறார்கள். சிலருக்கு அதிசய சக்தி இருப்பதால் 250 ஆண்டுகள் வாழ்கிறார்கள். சில பயமுறுத்தும் மிருகங்கள் இருக்கின்றன. அவற்றுக்குச் சிங்கம், சிறுத்தை போன்ற பெயர்களை வைத்திருக்கிறார்கள். சில குரங்குகள் பார்ப்பதற்கு அச்சு அசல் மனிதர்களைப் போலவே இருக்கின்றன. பல வண்ணங்களைக் கொண்ட அழகிய பெரிய பறவை ஒன்று உள்ளது. உலகில் வேறு எங்கும் இல்லாத அந்த அதிசயத்தின் பெயர் மயில்.

மார்கோ போலோவின் மிகப் பெரிய சாதனை இதுதான். பல இடங்களுக்குத் துணிச்சலாகச் சென்று வந்தது மட்டுமல்லாமல், தான் கண்ட, கேள்விப்பட்ட அத்தனை அதிசயக் கதைகளையும் அற்புதக் காட்சிகளையும் அவர் கவனமாகவும் விரிவாகவும் எழுதி வைத்தார். எந்தப் புதிய இடத்துக்குப் போனாலும் அந்த இடத்தின் பெயர், அங்கு வசிக்கும் மக்களின் மொழி, நடை உடை பாவனைகள், அவர்கள் பேசிக்கொண்ட கதைகள் என்று அனைத்தையும் குறித்து வைத்துக்கொண்டார்.

- தன் பயணங்களை முடித்துக்கொண்டு வெனிஸ் திரும்பிய மூன்று ஆண்டுகளில் பக்கத்து நகர அரசரால் மார்கோ போலோ கைது செய்யப்பட்டார். சிறையில் இருந்த மற்றொரு கைதியிடம் தன் அனுபவங்களை அவர் விவரித்தார். அந்தக் கைதியின் உதவியுடன்தான் புத்தகத்தை எழுதி முடித்தார்.
- குரங்கு, யானை, முதலை போன்ற விலங்குகளை முதல் முதலாகப் பார்த்தபோது அவற்றைப் புராண இதிகாச விலங்குகள் என்று நினைத்துக்கொண்டார். முதலையை, கூர்மையான பற்களைக் கொண்ட பெரிய பாம்பு என்று அவர் நம்பினார். காண்டாமிருகத்தை முதலில் கண்ட ஐரோப்பியர்களில் இவரும்

ஒருவர்.

- சீனாவில் நவீன தொழில்நுட்பத்தைப் பயன்படுத்துகிறார்கள் என்பதைக் கண்டறிந்து ஐரோப்பாவுக்குச் சொன்னவர் இவர்தான். காகிதத்தில் பணம், அடுப்பு எரிக்க நிலக்கரி, மூக்குக்கண்ணாடி ஆகியவற்றைச் சீனர்கள் பயன்படுத்துகிறார்கள் என்று அதிசயத்துடன் இவர் எழுதினார்.
- ஐரோப்பாவில் இருந்து கிழக்கு ஆசியா செல்ல மார்கோ போலோ காலகட்டத்தில் இரண்டு வழித்தடங்கள் இருந்தன. ஒன்று, பட்டுப் பாதை. இது 5,000 மைல் நீளம் கொண்டது. பட்டாடைகள் வாங்குவதற்காக வணிகர்கள் பயன்படுத்திய பாதை இது. இரண்டு, மசாலாப் பொருள்கள் வாங்குவதற்காகப் பயன்படுத்தப்பட்ட கடல் வழி மசாலாப் பொருள் பாதை. மார்கோ போலோ பட்டுப் பாதையைப் பயன்படுத்தினார்.
- மார்கோ போலோவின் பல குறிப்புகள் மிகைப்படுத்தப்பட்டவை. ஒரு சீன நகரில் சில பாலங்களைக் கண்டார். உடனே 12,000 பாலங்கள் இங்கே உள்ளன என்று எழுதிவிட்டார். குப்லாய் கான் வேட்டையாடும்போது கழுகுகளைக் கூட்டிச் செல்வது வழக்கம். அதைப் பார்த்த போலோ, மன்னர் 10,000 கழுகுகளுடன் வேட்டையாடச் செல்வார் என்று குறிப்பிட்டார்.
- தெரியாத விஷயங்களைக் கேட்டுத் தெரிந்துகொள்ள மொழி தடையாக இருந்ததால் தனக்குப் புரிந்ததை மட்டும் எழுதினார். இன்று நாம் வாசிக்கும்போது அவர் என்ன சொல்ல வருகிறார் என்பதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளமுடியும்.
- இலங்கையில் புத்தர் உருவத்தைக் கண்டார். அவரை இன்னொரு இயேசு கிறிஸ்து என்று நினைத்துக்கொண்டார்.
- சீனாவைப் பல ஆண்டுகள் சுற்றிவந்தபோதும் சீனப் பெருஞ்சுவர் பற்றி ஒரு வார்த்தைகூட போலோ எழுதவில்லை. ஏன்? அது அவரைக் கவரவில்லையா? மறந்துவிட்டாரா? தெரியாது.

# 4. இபின் பதூதா

## ஒரு சுதந்தரப் பறவையின் கதை

மார்கோ போலோவுக்கும் இபின் பதூதாவுக்கும் ஓர் ஒற்றுமை உண்டு. போலோவைப் போலவே பதூதாவும் இளம் வயதிலேயே தனது பயணங்களைத் தொடங்கிவிட்டார். 1325-ம் ஆண்டு ஜூன் மாதம் பதூதா தன் வீட்டை விட்டுப் புறப்பட்டபோது அவருடைய வயது 20. (சிலர் 21 அல்லது 22 என்று குறிப்பிடுகிறார்கள். வரலாற்றில் பின்னால் செல்லச் செல்ல இப்படிப்பட்ட குழப்பங்கள் தோன்றுவதைத் தவிர்க்க முடியாது.) போலோ தனது பயணத்தை உல்லாசமாகவே ஆரம்பித்தார். அவருடன் மூத்தவர்களும் குடும்பத்தினரும் உடன் இருந்தனர். வழி தவறினால் என்னாவது, வழியில் ஏதாவது ஆபத்து வந்தால் என்ன செய்வது என்பதைப் பற்றியெல்லாம் அவர் கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை.

ஆனால் பதூதாவுடன் யாரும் செல்லவில்லை. அவர் தனியாகத்தான் கிளம்பினார். போலோ சென்றது ஊர் சுற்ற. பதூதா சென்றது தனது மதக் கடமையை நிறைவேற்ற! ஆம், ஒவ்வோர் இஸ்லாமியருக்கும் மெக்கா, மெதினா செல்வது என்பது புனிதப் பயணம்தான் (ஹஜ்). வாழ்நாளில் ஒருமுறையாவது இந்த இரு இடங்களுக்கும் சென்றுவிடவேண்டும் என்பதுதான் இஸ்லாமியர்களின் பெரும் கனவாக இருக்கும். இபின் பதூதாவின் கனவும்கூட அதுதான். எளிமையான இந்தக் கனவு பதூதாவின் வாழ்வைத் தலைகீழாகத் திருப்பிப் போட்டது.

பதூதா பிறந்தது வட ஆப்பிரிக்காவில் அமைந்துள்ள மொரோக்கோ நாட்டில். குறிப்பாக, வடக்கு பகுதியில் உள்ள டான்ஜியர் என்னும் இடத்தில். அவருடைய குடும்பத்தைச் சேர்ந்த பலர் இஸ்லாமியச் சட்டங்களைக் கற்றறிந்த மேதைகளாக அறியப்பட்டிருந்தனர். பதூதாவும்கூட தன் குடும்பப் பாரம்பரியத்தைப் பின்பற்றி பள்ளிக்கூடத்தில் சட்டமே படித்திருக்கக்கூடும்.

போலோ, பதூதா இருவருமே தங்கள் பயணங்களைப் பற்றி விரிவாக எழுதி வைத்தனர். ஆனால் இதிலும் ஒரு வேறுபாடு. போலோவின் பயணக் குறிப்புகளில் தனிப்பட்ட முறையில் அவரைப் பற்றி எதுவுமே

இருக்காது. தான் பார்த்த புதிய நாடுகளையும் புதிய மனிதர்களையும் புதிய விலங்குகளையும் பற்றி மாய்ந்து மாய்ந்து எழுதியிருப்பார். ஆனால் தன்னுடைய உணர்வுகளை எங்குமே வெளிப்படுத்தியிருக்க மாட்டார். மிகவும் அபூர்வமாக ஓர் இடத்தில் குறிப்பு வரும். ‘நான் கொஞ்சம் குண்டு என்பதால் என் எடையைத் தாங்கும் அளவுக்குக் கனமான ஒரு குதிரையை எனக்குக் கொடுத்திருந்தார்கள்.’ அவ்வளவுதான்!

ஆனால் பதூதா, தன் பயணத்தோடு சேர்த்து தன்னைப் பற்றியும் எழுதியிருக்கிறார். தன்னுடைய முதல் பயணத்தைப் பற்றி எழுதும்போதே இந்த வழக்கமும் தொடங்கிவிட்டது. அவருடைய குறிப்பு இப்படித்தான் ஆரம்பிக்கிறது. ‘நான் தனியாகத்தான் கிளம்பினேன். வழித்துணையோ ஒரு பெரிய பயணக்குழுவோ என்னுடன் இல்லை. நான் நேசிக்கும் நபர்களை விட்டுப் பிரிவது வருத்தமானதுதான் என்று தெரிந்தும் பிரிந்துசெல்லவே முடிவெடுத்தேன்.’

இது மட்டுமா? தன்னுடைய மனநிலை அப்போது எப்படி இருந்தது என்பதையும் பதூதா பதிவு செய்திருக்கிறார், பாருங்கள். ‘என் அப்பா, அம்மாவிடம் இருந்து விடைபெறுவது மிகவும் கடினமாக இருந்தது. ஆனால் அந்தத் துயரத்தையும் கடந்துதான் நான் வீட்டைவிட்டு வெளியேறினேன். கூட்டைவிட்டு வெளியேறும் பறவையைப்போல்!’

இந்த ஹஜ் பயணம் மேற்கொள்ள எவ்வளவு காலம் பிடிக்கும் என்பதைத் தெரிந்தால்தான் பதூதா ஏன் இந்த அளவுக்கு வருந்தினார் என்பது புரியவரும். மொராக்கோவில் இருந்து கிளம்பி பெரும்பாலும் கால்நடையாகவும் சில நேரம் ஒட்டகம் மூலமாகவும் மெக்கா, மெதினா சென்று திரும்ப சுமாராக 16 மாதங்கள் பிடிக்கும். ஆனால் பதூதா தன் ஊருக்குத் திரும்பிவர மேலும் கூடுதலான நேரம் தேவைப்பட்டது. எவ்வளவு தெரியுமா? 24 ஆண்டுகள்!

ஆரம்பத்தில் இருந்தே பார்ப்போம். தன் முதல் பயணத்தைத் தொடங்கியபோது பதூதாவிடம் இருந்தது ஒரு கழுதை மட்டுமே. பிறகு உணவு, துணிமணிகள், தண்ணீர் கொண்ட ஒரு பெரிய மூட்டை. ஆடி, அசைந்து நடக்கத் தொடங்கியது கழுதை. பதூதா பொறுமையாக அதைப் பின்தொடர்ந்தார். ஒரு நாள், துனிஸ் என்னும் இடத்துக்கு வந்துசேரும்போது அவர் ரொம்பவே களைத்துப் போய்விட்டார். ஆரம்பத்தில் சுதந்தரப் பறவைபோல் உணர்ந்தாலும் அப்பா, அம்மா நினைவு அவரை வாட்ட ஆரம்பித்துவிட்டது. உடல்நிலையும் அடிக்கடி படுத்த ஆரம்பித்தது. என்ன செய்வது? தொடரலாமா அல்லது அப்படியே விட்டுவிட்டு வீடு திரும்பிவிடலாமா? தடுமாறிக்கொண்டிருந்த பதூதாவுக்கு

வழிபோக்கர்கள் ஆலோசனை சொன்னார்கள். 'இவ்வளவு தூரம் கிளம்பி வந்துவிட்டாய், எதற்காகப் பாதியில் விடவேண்டும்? எனக்குத் தெரிந்து இரண்டு பயணக்குழு இப்போதுதான் இங்கிருந்து கிளம்பியிருக்கிறது. அவர்களுடன் சேர்ந்துகொள்!'

எல்லாப் பயணங்களிலும் இது நடக்கும். இருப்பதிலேயே கடினமானது முதல் அடியை எடுத்து வைப்பது. அதைச் செய்துவிட்டால் பாதி வெற்றி. ஆனால் இடையில் பல்வேறு தொல்லைகளும் சிக்கல்களும் உங்களைப் பிடித்து இழுக்கும். பாதியில் நிறுத்திவிடலாம் என்று தோன்றும். வீட்டில் இருந்தால் நிம்மதியாக இருக்கலாமே, எதற்குத் தெரியாத இடங்களுக்குச் சென்று அவதிப்படவேண்டும் என்னும் கேள்வி எழும். நிறைய பேர் தங்கள் பயணத்தை இப்படிப் பாதியில் நிறுத்தியிருக்கிறார்கள். இன்னும் சிலருக்கு மேற்கொண்டு முன்னேறுவதற்கு ஏதேனும் சில உதவிகள் கிடைக்கும். பதூதாவுக்குக் கிடைத்ததைப்போல்.

பதூதா அந்த ஆலோசனையை ஏற்றுக்கொண்டார். மேற்கொண்டு தொடரலாம் என்று முடிவெடுத்த பிறகு பதூதா ஒரு புதிய மனிதராக மாறியிருந்தார். எப்படியாவது எடுத்த காரியத்தை முடித்தே தீரவேண்டும் என்னும் உத்வேகம் பிறந்தது. இடையில் காய்ச்சல் அவரை வாட்டியெடுத்தது. கொள்ளையர்கள் கூட்டம் நெருங்கிச் சென்றது. பதூதா அசரவேயில்லை. கடவுள் என்னை என்ன செய்யவேண்டும் என்று நினைக்கிறாரோ, செய்துகொள்ளட்டும். நான் என் வழியில் சென்றுகொண்டிருப்பேன் என்று கூறிவிட்டார்.

இன்னோர் ஆலோசனை கிடைத்தது. 'உன் கழுதையையும் பெரிய மூட்டையையும் விற்றுவிடு. இல்லாவிட்டால் யாராவது திருடிக்கொள்வார்கள். எந்தவித கனமும் இல்லாமல், சுதந்தரமாகச் சென்றால்தான் விரைவாகப் பயணத்தை முடிக்கமுடியும்.' பதூதா உடனே ஒப்புக்கொண்டார். வழியில் கிடைத்த உணவை உட்கொண்டார். எங்கெல்லாம் கூட்டம் கூட்டமாக மக்கள் செல்கிறார்களோ, அங்கெல்லாம் அவர்களுடன் ஒன்றிக்கொண்டார்.

போகும் வழியிலேயே ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்து, பதூதா அவரைத் திருமணமும் செய்துகொண்டார். இது எப்படி நடந்தது என்பதைப் பற்றிய விரிவான குறிப்புகள் இல்லை. 1326-ம் ஆண்டு, அலெக்சாண்ட்ரியா என்னும் துறைமுக நகருக்கு வந்துசேர்ந்தார் பதூதா. இதுவரை 3,500 கி.மீ. தொலைவை அவர் கடந்துவந்திருந்தார். இனி மெக்காவையும் மெதினாவையும் தொட்டுப் பிடித்துவிடலாம் என்னும் நம்பிக்கை அவருக்குள் பிறந்தது.

இதோ என் நீண்ட பயணம் முடிவடையப் போகிறது. நான் எதிர்பார்த்து காத்திருக்கும் புனித இடங்களைப் பார்த்துவிடுவேன்.

என் லட்சியம் நிறைவேறிவிடும்! பதூதா கனவு காண ஆரம்பித்தார். அப்போதே அவருக்கு அந்தச் சந்தேகமும் தோன்றிவிட்டது. சரி, இந்த இரண்டு இடங்களையும் தரிசித்து முடித்த பிறகு என்ன செய்வது? வீடு திரும்பிவிடலாமா? மொராக்கோ சென்று அம்மா, அப்பாவிடம் இணைந்துவிடலாமா? பிறகு? மிச்ச வாழ்க்கையை என்ன செய்வது? என்ன திட்டம்?

அப்போது ஷேக் பர்ஹானுதின் என்பவர் பதூதாவை நெருங்கி வந்தார். எனக்கோர் உதவி செய்ய முடியுமா என்றார். சொல்லுங்கள் என்றார் பதூதா. அவர் கேட்ட அந்த உதவி விசித்திரமாக இருந்தது. ‘இந்தியாவில் என் சகோதரர் இருக்கிறார். அவரைப் பார்க்கும்போது, நான் அவரை விசாரித்தேன் என்று சொல்லுங்கள். சிந்த் பிரதேசத்தில் என்னுடைய இன்னொரு உறவினர் இருக்கிறார். அவரிடமும் பேசுங்கள். பிறகு, சீனா போகும்போது அங்கு ஒருவரைச் சொல்கிறேன். அவரிடமும் நான் விசாரித்தேன் என்று தகவல் சொல்லுங்கள்.’

பதூதா குழம்பி நின்றார். ‘ஐயா, நான் அங்கெல்லாம் போகப்போவதில்லை. நான் மொராக்கோவில் இருந்து ஹஜ் பயணம் மேற்கொள்ள வந்தவன். நான் திரும்ப ஊருக்குத்தான் போகப்போகிறேன்.’ அந்த முதியவர் புன்னகை செய்தார். ‘அப்படியா? உன்னைப் பார்த்தால் நீ மேலும் பல பயணங்களை மேற்கொள்வாய் என்றுதான் தெரிகிறது. உனக்கும் இப்படி ஊர் சுற்றுவதுதானே பிடித்திருக்கிறது? பிறகு ஏன் வீட்டுக்குப் போகவேண்டும்?’

இபின் பதூதாவுக்குச் சட்டென்று ஒரு மின்னல் வெட்டியதுபோல் இருந்தது.

*

மெக்கா, மெதினா இரண்டையும் தரிசித்து முடித்த பிறகும் இபின் பதூதாவுக்குத் தாகம் அடங்கவேயில்லை. இந்த இரு இடங்களும் முக்கியமானவை, சந்தேகமேயில்லை. ஆனால் இந்த இரண்டோடு பயணத்தை முடித்துக்கொள்ள முடியுமா என்ன? இந்த உலகம் பெரியது என்றல்லவா சொல்கிறார்கள்? எவ்வளவு பெரியது என்று பார்த்துவிட வேண்டாமா? மேலும் நிலத்தில் மட்டுமே பயணம் செய்தால் போதுமா? கடல் கடந்து, மலை கடந்து, தூர தேசங்களுக்கு எல்லாம் போக வேண்டாமா?

அதற்குப் பிறகு இபின் பதூதா ஒரு நிமிடத்தைக்கூட வீணாக்க விரும்பவில்லை. எங்காவது வழியில் ஒரு குழு தட்டுப்பட்டால் போதும், உடனே ஓடிப்போய் விசாரிக்க ஆரம்பித்துவிடுவார். ஐயா,

நீங்களெல்லாம் எந்த ஊருக்குப் போகிறீர்கள்? அங்கே என்னென்ன இருக்கும்? நானும் உங்களுடன் வந்தால் கோபித்துக்கொள்ள மாட்டீர்களே? சரி, வா என்று சில பயணிகள் பதூதாவை ஏற்றுக்கொண்டனர். எகிப்து, பாலஸ்தீனம், சிரியா, இராக், மெசபடோமியா என்று பதூதா சுற்றத் தொடங்கியது இப்படித்தான்.

புதிய இடங்களைப் பார்க்கப் பார்க்க அவருடைய ஆர்வம் மேலும் மேலும் அதிகரிக்கத் தொடங்கியது. குறிப்பாக, ஆப்பிரிக்கா, ஆசியா இரண்டும் பதூதாவைத் தூண்டில் போட்டு இழுத்தன. இந்த இரு கண்டங்களையும் அவற்றில் உள்ள எல்லா நாடுகளையும் பார்த்தே தீர்வது என்று சபதம் போட்டுக்கொண்டார். அதற்கு செங்கடல் உதவும் என்று தெரிந்ததும் உற்சாகமடைந்தார்.

பதூதாவுக்குப் பிடித்த ஆப்பிரிக்கா, ஆசியா இரண்டுக்கும் நடுவே அமைந்திருந்தது செங்கடல். இதில் பயணம் செய்தால் இரு பக்கங்களிலும் உள்ள நாடுகளைக் காணமுடியும் அல்லவா?

என்ன சாப்பிடுவது, எங்கே தங்குவது என்பதைப் பற்றியெல்லாம் பதூதாவுக்குக் கவலையே இருந்ததில்லை. யார் எதைக் கொடுத்தாலும் தயங்காமல் வாங்கிச் சாப்பிட்டார். வழிபாட்டு இடங்களில் கும்பலோடு கும்பலாகப் படுத்து உறங்கினார். கையில் உள்ள ஆடைகளைக் கசக்கி காயவைத்து உடுத்திக்கொண்டார். அப்போதெல்லாம் பதூதா போன்ற பயணிகளுக்கு உணவும் இருப்பிடமும் அளிக்க ஊர் பெரிய மனிதர்கள் பலர் ஆர்வம் காட்டினார்கள். இந்தா சாப்பிடு என்று ஏதாவது கொடுத்துவிட்டு, அப்புறம் எங்கே போய் வந்தாய் சொல் என்று கதை கேட்பார்கள். அவர்களுக்கும் அதுதானே பொழுதுபோக்கு! மேலும், பதூதாவுக்கும் கதை சொல்வதென்றால் கொள்ளைப் பிரியம் என்பதால் உண்மை, கற்பனை என்று கலந்து அடித்துவிடுவார்.

எளிய குடிசை வீட்டில் ஒரு நாள் தங்குவார். மறுநாள் அரண்மனை சென்று மன்னரைச் சந்திப்பார். என்னதான் மன்னராக இருந்தாலும், ஆயிரம் வசதி வாய்ப்புகள் இருந்தாலும் எல்லா நாடுகளுக்கும் சென்றுவரும் வாய்ப்பு கிடைக்காது அல்லவா? அதனால் பதூதாவிடம் எல்லா விவரங்களையும் கேட்டுக்கொள்வார். ஆடம்பரமான அரண்மனை வாழ்க்கை சில நாள்கள் கிடைக்கும். பிறகு மூட்டை முடிச்சை எடுத்துக்கொண்டு மீண்டும் கப்பலில் ஏறிவிடுவார்.

பல இடங்களுக்குப் போகவேண்டும் என்னும் பதூதாவின் ஆசை, இருப்பதிலேயே கடினமான இடங்களுக்குப் போகவேண்டும் என்பதாக மாறியது. அப்போதே இந்தியா போகவேண்டும் என்று கனவு காண ஆரம்பித்துவிட்டார். இந்து குஷ் மலைத் தொடர் பகுதியைக் கடந்தால்தான் இந்தியா போகமுடியும் என்று

சொன்னபோது ஆசை பலமடங்கு அதிகரித்தது. 13,000 அடிகள் கொண்ட காவாஸ் பாஸ் எனப்படும் பகுதியைக் கடந்து சென்றார்.

அதைப் பற்றி அவர் எழுதிய குறிப்பு இது. 'மிகவும் உயரமான மலை அது. முழுக்க பனியால் மூடப்பட்டிருந்தது. நடுநடுங்க வைக்கும் பயங்கரமான குளிர். அதை இந்து குஷ் என்று அழைக்கிறார்கள். இந்துகளைக் கொல்லும் குளிர் என்பதுதான் இதன் அர்த்தம். இங்கு வரும் பலர் குளிர் தாங்காமல் இறந்துவிடுவார்களாம்.'

அங்கிருந்து ஆப்கனிஸ்தான் வழியாகச் சிந்து நதிக்கரைக்கு செப்டெம்பர் 1333-ல் வந்துசேர்ந்தார் பதூதா. அங்கிருந்து டெல்லி சென்றார். அப்போது சுல்தானாக இருந்த முகமது பின் துக்ளக்கைச் சந்தித்தார். அவருக்குப் பதூதாவைப் பிடித்துவிட்டது. மெக்கா சென்றவர், இஸ்லாமியச் சட்டங்களைப் பயின்றவர் என்பதால் கூடுதல் மரியாதையும் கிடைத்தது. நீங்கள் ஏன் என்னுடைய அரசவையில் நீதிபதியாகப் பணியாற்றக்கூடாது என்று துக்ளக் கேட்டார். பதூதா ஏற்றுக்கொண்டார். உல்லாசமாக அதுவரை ஊர் சுற்றிக்கொண்டிருந்தவரைப் பிடித்து இழுத்து ஒரு நாற்காலியில் உட்கார வைத்துவிட்டார்கள்!

ஆனால் பதூதா விடுவாரா? இந்தியாவை வலம் வர ஆரம்பித்துவிட்டார். சிந்து நதிக்கரையில் சுற்றிக்கொண்டிருந்த காண்டாமிருகத்தைப் பார்த்து ஆச்சரியத்தில் ஆழ்ந்து போனார். அதைப் பற்றி விரிவாகத் தன் டைரியில் எழுதினார். மற்றபடி, விரைவில் அவருக்குச் சலிப்பு ஏற்பட ஆரம்பித்துவிட்டது. சுல்தான், நான் இன்னொரு முறை மெக்கா போகலாம் என்று நினைக்கிறேன், கிளம்பட்டுமா? என்று கேட்டுப் பார்த்தார். துக்ளக் ஒப்புக்கொள்ளவில்லை. மன்னிக்கவும், என்னால் ஓரிடத்தில் அமைதியாக உட்கார முடியாது, ஒரு பறவைபோல் சுற்றியே பழக்கமாகிவிட்டது என்று கிட்டத்தட்ட அழுதேவிட்டார்.

சரி, அப்படியானால் ஒரு வேலை இருக்கிறது, சீனா போய்வாருங்கள் என்று சொல்லி படை, பரிவாரங்களுடன் அனுப்பி வைத்தார் துக்ளக். ஆஹா பிரமாதம் என்றுதான் கிளம்பிப் போனார். ஆனால் தனியாக எங்கோ சுற்றிக்கொண்டிருந்தபோது, கொள்ளைக்காரர்கள் அவரை மடக்கிவிட்டார்கள். அவரிடம் இருந்ததை எல்லாம் திருடிவிட்டார்கள். எதற்காக இவனை விட்டுவைக்கவேண்டும், கொன்றுவிடலாம் என்றுகூட நினைத்தார்கள். பிறகு என்ன நினைத்தார்களோ, அவரை ஒன்றும் செய்யாமல் விட்டுவிட்டார்கள்.

இனி சீனா போக முடியாது என்பதால் பத்து நாள்கள் கழித்து கடல் வழியே கோழிக்கோடு போனார் பதூதா. இரண்டு நூற்றாண்டுகள் கழித்து இதே இடத்துக்குதான் வாஸ்கோ ட காமா வந்துசேர்ந்தார்.

பிறகு அங்கிருந்து கொல்லம் சென்றார். அங்கே ஒரு மசூதி இருப்பதை அறிந்து அதைப் பார்க்கப் போனார். ஆனால் அதற்குள் பெரும் சூறாவளி ஒன்று கிளம்பி பதூதாவின் கப்பலைக் கவிழ்த்துவிட்டது. பதூதாவுக்கு ஒரே கவலை! டெல்லி போனால் துக்ளக் நிச்சயம் திட்டுவார். சீனாவுக்குப் போகவில்லை. கொண்டுபோன பொருள்கள் கொள்ளை போய்விட்டன. கப்பலும் கவிழ்ந்துவிட்டது. என்ன செய்வது?

கப்பல் மட்டுமா கவிழ்ந்தது? துக்ளக்கின் ஆட்சியும் கவிழ்ந்துவிட்டது என்னும் செய்தி வந்துசேர்ந்தது. சரி, இனி டெல்லிக்குப் போக வேண்டியதில்லை என்று நினைத்துக்கொண்டார் பதூதா. அடுத்து எங்கே போவது? புறப்பட்டது சீனாவுக்கு என்பதால் அங்கேயே போய்விடலாம் என்று முடிவெடுத்தார். இடையில் மாலத்தீவுக்குக் கடல் வழியாகவே சென்றார். குட்டித் தீவுதானே ஒரே நாளில் பார்த்துவிடலாம் என்றுதான் நினைத்தார். ஆனால் அங்கே 9 மாதங்கள் தங்கினார். காரணம் அங்கிருந்த ஓமர் என்னும் ராஜா. ஒரு பௌத்த நாடாக இருந்த மாலத்தீவு இப்போது இஸ்லாமிய நாடாக மாறியிருந்தது. இஸ்லாமியச் சட்டம் தெரிந்த பதூதா அங்கே இருப்பது நல்லது என்று ஓமர் நினைத்தால் அவரைப் பிடித்து இழுத்து கிட்டத்தட்ட கைதிபோல் நீதிபதி பதவியில் உட்கார வைத்துவிட்டார்.

இதென்ன, எங்கே போனாலும் வேலை செய்யச் சொல்கிறார்களே என்று பதூதா நினைத்திருக்கவேண்டும். ஒரு வழியாக அங்கிருந்து விடுவித்துக்கொண்டு இலங்கை சென்றார். இலங்கையில் கால் பதிப்பதற்குள் அவருடைய கப்பல் கிட்டத்தட்ட முழுமையாக மூழ்கிவிட்டது. அடடா, நாம் நினைத்ததைவிட ஒவ்வொரு நாளும் சாகசம் அதிகமாகிக்கொண்டே போகிறதே என்று உற்சாகமடைந்தார் பதூதா. ஆம், அதுதான் இபின் பதூதாவின் சிறப்பம்சம். கப்பல், ஆட்சி எது கவிழ்ந்தாலும் அவருக்குக் கவலை இல்லை. வழி தவறினால், கொள்ளைக்காரர்கள் வந்தால் கவலையில்லை. நான் இதற்கெல்லாம் கவலைப்பட மாட்டேன், என் லட்சியம் பயணம் செய்வது மட்டுமே என்று ஒவ்வொரு முறையும் சொல்லிக்கொள்வார். சுமத்ரா, வியட்நாம், சீனா, ரஷ்யா என்று பல நாடுகளைச் சுற்றிவந்தார் பதூதா. மலை, வெள்ளம் எதுவும் அவரைத் தடுக்கவில்லை. நிலம், கடல் எதையும் அவர் விட்டுவைக்கவில்லை.

1348-ம் ஆண்டு டமாஸ்கஸ் வந்துசேர்ந்தார் இபின் பதூதா. இதுவரை எங்கெல்லாம் சென்றுவந்தோம் என்று பட்டியலிட்டுப் பார்த்தபோது ஓர் ஆச்சரியமான உண்மை தெரியவந்தது. பக்கத்திலும் தூரத்திலும் உள்ள எல்லா இஸ்லாமிய நாடுகளையும் இபின் பதூதா வலம்வந்திருந்தார். சரி, அடுத்து எங்கே என்று சிலர் அவரைக் கேட்டார்கள். நான் போகாத ஓரிடம் இருக்கிறது, போயே

தீரவேண்டிய ஓரிடம் இருக்கிறது, அங்கேதான் போகப்போகிறேன் என்று பதிலளித்தார் பதூதா.

அந்த இடம், வேறு எதுவும் இல்லை. மொராக்கோ! ஆம், அவருடைய வீடு!

- வீட்டைவிட்டு வெளியே செல்லவே தயங்கிய இபின் பதூதா அடுத்த 30 ஆண்டுகள் பயணம் மட்டுமே மேற்கொண்டார்.
- இபின் பதூதாவின் முழுப் பெயர் என்ன தெரியுமா? அபு அப்துல்லா முகம்மது இபின் பதூதா.
- தனது பயணங்களைப் பற்றி விரிவாக எழுதுவதற்காகவே ஓர் உதவியாளரை பணியில் வைத்துக்கொண்டார் இபின் பதூதா. அவர் பெயர் இபின் ஜுசாய்.
- பதூதாவின் நினைவாற்றல் ஆச்சரியமூட்டக்கூடியது. பல பயணங்களுக்குப் பிறகும் தான் சந்தித்த மனிதர்களின் பெயர்கள், இடங்களின் பெயர்கள் போன்றவற்றை அவர் மறக்கவில்லை.
- இபின் பதூதாவைப் பார்த்து பல இஸ்லாமியர்கள் நீண்ட பயணங்கள் மேற்கொள்ள ஆரம்பித்தார்கள். அவரைப் போலவே தங்கள் அனுபவங்களையும் எழுதி வைத்தார்கள்.
- இபின் பதூதா அவர் வாழ்ந்த காலத்தில் எங்கெல்லாம் இஸ்லாமிய ஆட்சி நடைபெற்றதோ அங்கெல்லாம் சென்றுவந்தார். அவ்வாறு சென்ற முதல் பயணி அவர்தான்.
- கிட்டத்தட்ட 75,000 மைல்களை பதூதா பயணம் செய்து கடந்திருந்தார். அவருக்கு முன்னால் இவ்வளவு தொலைவு வேறு யாரும் சென்றதில்லை.
- செங்கடல், அரபிக் கடல், இந்தியப் பெருங்கடல் மூன்றிலும் பயணம் செய்தார் பதூதா. இங்கெல்லாம் இஸ்லாமிய மன்னர்கள் நல்ல செல்வாக்குடன் ஆட்சி புரிந்துவந்தனர் என்பதை பதூதாவின் பயணத்துக்குப் பிறகே உலகம் தெரிந்துகொண்டது.
- இதோ வருகிறேன் என்று சொல்லிவிட்டு கிளம்பிய பதூதா வீட்டுக்குத் திரும்பியபோது பல கெட்ட செய்திகள் அவருக்குக் காத்திருந்தன. அவர் அப்பா 15 ஆண்டுகளுக்கு முன்பே இறந்துபோயிருந்தார். பிளேக் எனப்படும் கொள்ளை நோய் அவருடைய நாட்டில் பரவிக்கொண்டிருந்தது.
- அரபு நாடுகளில் அதிகம் சுற்றும் நபர்களை இபின் பதூதா என்று செல்லப் பெயரிட்டு அழைத்தார்கள்.

# 5. கிறிஸ்டோபர் கொலம்பஸ்

## அமெரிக்காவைக் கண்டுபிடிக்காதவர்

**வ**ரலாறு இதுவரை கண்டுள்ள பயணிகளில் அதிகம் பிரபலமானவர் கிறிஸ்டோபர் கொலம்பஸ். அவரைப் பற்றித் தெரியாதவர்களே இல்லை என்று சொல்லிவிடலாம். உலகம் முழுவதிலுமுள்ள பள்ளிப் பாடப் புத்தகங்களில் அவர் இடம்பெற்றிருக்கிறார். தெருக்களும் நகரங்களும் அவர் பெயரைத் தாங்கி நிற்கின்றன. அமெரிக்காவில் உங்களுக்குத் தெரிந்த ஒரே ஒரு நபரின் பெயரைச் சொல்லுங்கள் என்று கேட்டால் அநேகமாக எல்லாருமே அவரைத்தான் குறிப்பிடுவார்கள். கொலம்பஸ் மட்டுமல்ல, அவர் அமெரிக்காவைக் கண்டுபிடித்த 1492 என்னும் ஆண்டு கூட அவரைப் போலவே புகழ் பெற்றுவிட்டது.

உண்மை என்ன தெரியுமா? அமெரிக்கக் கண்டத்தில் முதன் முதலாகக் கால் பதித்தவர் கொலம்பஸ் அல்ல. அவர் அங்கே போவதற்கு 500 ஆண்டுகளுக்கு முன்பே வைக்கிங்குகள் என்று அழைக்கப்படும் வட ஐரோப்பியர்கள் கனடாவில் இறங்கிவிட்டனர். வட அட்லாண்டிக் பகுதியில் ஐஸ்லாந்து, கிரீன்லாந்து இரண்டையும் கடந்து அமெரிக்கக் கண்டத்தின் ஒரு பகுதியான கனடாவை அவர்கள் அடைந்தனர். அப்படியானால் ஏன் நாம் இன்னமும் அமெரிக்காவைக் கண்டுபிடித்தது கொலம்பஸ் என்று சொல்லிக்கொண்டிருக்கிறோம்? அதைத் தெரிந்துகொள்வதற்கு முன்னால் கொலம்பஸை அறிமுகம் செய்துகொண்டுவிடலாம்.

கொலம்பஸ் பற்றிய தொடக்க கால வரலாறைத் தேடிப் போனால் இரண்டு விதமான தகவல்கள் கிடைக்கின்றன. ஒன்று, சுவாரஸ்யமான தகவல்கள். இரண்டு, ஆதாரம் இல்லாத, நிரூபிக்கமுடியாத தகவல்கள். இந்த இரண்டையும் ஒதுக்கிவிட்டு உறுதியாக நமக்குத் தெரியவரும் விஷயங்களை மட்டும் பார்ப்போம். கொலம்பஸ் பிறந்தது 1451-ம் ஆண்டு. தேதி, மாதம் எல்லாம் உறுதியாகத் தெரியவில்லை. ஜெனோவா என்னும் இத்தாலிய நகரில் அவர் பிறந்தார்.

கொலம்பஸின் அப்பா, அம்மா இருவருமே நெசவுத் தொழில்

பின்னணியைச் சேர்ந்தவர்கள். குறிப்பாக, கம்பளி ஆடைகளை நெய்து விற்பனை செய்துவந்தார்கள். கொலம்பஸ், அவருடைய இரு தம்பிகள் என்று குடும்பத்தில் உள்ள எல்லோரும் கம்பளி ஆடை உற்பத்தில் தங்களால் இயன்ற உதவிகளைச் செய்துவந்தார்கள். நீண்ட காலத்துக்கு கொலம்பஸுக்கு எழுதவோ படிக்கவோ தெரியாது என்று சொல்லப்படுகிறது.

இத்தாலியின் முக்கியமான துறைமுக நகரமாக ஜெனோவா இருந்தது. மீன் பிடிக்கும் கப்பல்கள், சண்டை போடுவதற்காக வடிவமைக்கப்பட்ட போர் கப்பல்கள், வணிகர்கள் சென்று வருவதற்கான வர்த்தக கப்பல்கள் என்று சிறியதும் பெரியதுமாகப் பல வகை கப்பல்கள் துறைமுகத்தில் எந்த நேரமும் நிரம்பியிருக்கும். எனவே கடல் பயணங்களை மையப்படுத்தி பல தொழில்கள் உருவாயின. அவற்றில் ஒன்று, வரைபடம் தயாரிக்கும் பணி. கார்டோகிராஃபி எனப்படும் இந்தத் துறையில் அப்போது பலர் ஈடுபட்டிருந்தனர். ஒவ்வொரு புதிய இடம் கண்டுபிடிக்கப்படும்போதும் அதைச் சரியான இடத்தில் குறிப்பிட்டு புதிய வரைபடத்தை அவர்கள் தயாரித்துவந்தார்கள். புதிய இடங்களுக்கு கப்பல்களைச் செலுத்தும் கேப்டன்களிடம் இருந்து தங்களுக்குத் தேவைப்படும் விவரங்களைப் பெற்றுக்கொண்டு அவர்கள் வரைபடங்களை உருவாக்கினார்கள்.



கரை இறங்கும் கொலம்பஸ் - 1492

இதெல்லாம் இளம் கொலம்பஸை மிகவும் கவர்ந்தது. கம்பளியை விற்பதற்காகவோ புதிய சரக்குகளை வாங்குவதற்காகவே அப்பா ஒவ்வொருமுறை கப்பலில் செல்லும்போது கொலம்பஸும் தாவிவந்து ஏறிக்கொண்டார்.

அப்பா கம்பளியைக் கணக்கு செய்துகொண்டிருக்கும்போது கொலம்பஸ் கப்பலையும் கடலையும் கவனித்துக்கொண்டிருப்பார். கப்பல் எப்படி இயக்கப்படுகிறது என்பதைத் தெரிந்துகொள்ள அவர் ஆர்வம் காட்டினார். எப்படி லாவகமாகத் திசையறிந்து கப்பலை வளைத்துத் திருப்புகிறார்கள்? எப்படிச் சூறாவளிகளை எதிர்கொள்கிறார்கள்? எப்போது ஓய்வெடுக்கிறார்கள் என்பதையெல்லாம் வாயைப் பிளந்துகொண்டு பார்த்துக்கொண்டிருப்பார்.

15 முதல் 23 வயதுவரை கொலம்பஸ் ஓயாமல் சுற்றிக்கொண்டே இருந்தார். ஓயாமல் கற்றுக்கொண்டே இருந்தார். நமக்கு கம்பளியெல்லாம் சரிப்பட்டு வராது என்று அப்போதே அவர் முடிவு செய்திருக்கவேண்டும். அதில் புதிதாகக் கண்டுபிடிப்பதற்கு என்ன இருக்கிறது? ஆர்வமூட்டக்கூடியதாக என்ன இருக்கிறது? பயணம் அப்படி இல்லை அல்லவா? இதுவரை யாருக்கும் தெரியாத ஒரு புதிய இடத்தை நாளையே ஒரு கேப்டன் கண்டடைந்துவிடக்கூடும். அதை வரைபடத்தில் இடம்பெறச் செய்யவும் முடியும். இது எவ்வளவு பெரிய விஷயம்!

மத்தியத்தரைக்கடல் பகுதியின் கிழக்கே அமைந்துள்ள சியோஸ் என்னும் தீவுக்கு ஒருமுறை சென்றார் கொலம்பஸ். ஜெனோவாவின் வர்த்தக காலனியாக இந்தத் தீவு இருந்தது. இத்தாலிய வணிகர்கள் இங்கே வந்து பண்டங்களை விற்றும் வாங்கியும் சென்றதைப் பார்த்தார் கொலம்பஸ். ஆசியாவில் இருந்து வந்திருந்த வணிகர்களும் அந்தத் தீவில் குழுமியிருந்தனர். ஆசியாவும் ஐரோப்பாவும் தொட்டுக்கொள்ளும் இடமாக அந்தச் சிறு தீவு அமைந்திருந்ததைக் கண்டு கொலம்பஸ் உற்சாகமடைந்தார்.

13 ஆகஸ்ட் 1576 அன்று பெச்சல்லா என்னும் கப்பலில் செல்லும் வாய்ப்பு கொலம்பஸுக்குக் கிடைத்தது. அப்போது அவர் வயது 25. உற்சாகமாகக் கப்பலைச் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்தார். திடீரென்று கப்பல் ஆட ஆரம்பித்தது. கப்பலில் இருந்தவர்கள் பதற்றத்துடன் அங்கும் இங்கும் ஓடினார்கள். எங்கே திரும்பினாலும் கூச்சல், குழப்பம். ஒருவேளை பெரும் புயலில் மாட்டிக்கொண்டுவிட்டோமா என்று அஞ்சினார் கொலம்பஸ்.

புயல் அல்ல. அந்தக் கப்பலை பிரெஞ்சு, போர்ச்சுகீசிய கப்பல்கள் சூழ்ந்துகொண்டு தாக்கிக்கொண்டிருந்தன. அவர்கள் கடல் கொள்ளையர்கள் என்று தெரிந்துகொண்டார் கொலம்பஸ். அமைதியாகக் காத்திருந்து, தகுந்த கப்பலைத் தேர்ந்தெடுத்து தாக்கி கொள்ளையடிப்பதே அவர்களுடைய முழுநேர வேலை. கப்பலில் உள்ளவர்களுடன் சண்டையிட்டு, கொல்லவும் அவர்கள் தயங்கமாட்டார்கள். அப்போது எல்லா அரசாங்கங்களுக்கும் பெரும் சவாலாக இருந்தார்கள் இத்தகைய கொள்ளையர்கள். வணிகக் கப்பல்கள் பயந்து பயந்துதான் பல பகுதிகளைக் கடந்துசெல்ல வேண்டியிருந்தது. வசதி படைத்த பெரிய வணிகர்கள் சில போர்க்கப்பல்களையும் உடன் அழைத்துச் செல்வது வழக்கம். வசதி இல்லாதவர்களும் கூட ஆயுதம் தாங்கிய வீரர்கள் சிலரைத் தங்களுடன் எப்போதும் வைத்திருந்தனர்.

கொலம்பஸ் இருந்த கப்பலால் கொள்ளையர்களைத் தாக்கி

விரட்டியடிக்க முடியவில்லை. அது தடுமாறிக்கொண்டிருந்தது. கொலம்பஸும்கூட கொள்ளையர்களுடன் பாய்ந்து போரிடத் தயராகிவிட்டார். ஆனால் சமாளிக்க முடியவில்லை. இவ்வளவு பெரிய படைகளை அவர் அதற்கு முன் பார்த்ததில்லை என்பதால் தடுமாறிக்கொண்டிருந்தார்.

இரவு நெருங்க நெருங்க போரும் தீவிரமடைந்தது. கொலம்பஸின் கப்பல் தோற்கத் தொடங்கியிருந்தது. கொலம்பஸ் உள்பட பலரும் காயமடைந்தனர். கப்பலாவது, செல்வமாவது உயிர் பிழைத்தால் போதும் என்று பலர் கடலுக்குள் பாய்ந்து வேக வேகமாக நீந்தத் தொடங்கினர். ஆம், அது ஒன்றுதான் வழி என்று கொலம்பஸும் முடிவு செய்து கடலுக்குள் குதித்தார்.

கொலம்பஸுக்கு மிக நன்றாக நீச்சல் தெரியும். ஆனால் அவர் பிரச்னை அதுவல்ல. இங்கிருந்து எவ்வளவு தூரத்துக்கு நீந்திச் செல்ல முடியும்? கரை எங்காவது பக்கத்தில் இருக்கிறதா? மேலும், காயப்பட்டு ரத்தம் வேறு வடிந்துகொண்டிருப்பதால் கரை போய்ச் சேரும்வரை உயிர் பிழைத்திருப்பது சாத்தியமா? ஆனால் இதையெல்லாம் யோசித்துக்கொண்டிருப்பதில் பலனில்லை என்று மூச்சைப் பிடித்துக்கொண்டு நீந்தத் தொடங்கினார்.

சிறிது நேரத்தில் கப்பலின் ஓர் உடைந்த மரப் பகுதி கைகளுக்குத் தட்டுப்பட்டது. அதைக் கடவுளின் வரம் என்றே நினைத்து பாய்ந்து பற்றிக்கொண்டார். கொலம்பஸின் பெற்றோர் தங்கள் குழந்தைகளை இறை பக்தி கொண்ட கத்தோலிக்கர்களாக வளர்த்திருந்தனர். கிறிஸ்டோபர் என்னும் பெயரும்கூட புனித துறவியர் ஒருவரின் பெயர்தான். தன்னை இயேசு நாதர்தான் தேர்ந்தெடுத்து இந்த உலகுக்கு அனுப்பி வைத்திருக்கிறார் என்றுதான் நீண்ட காலம் கொலம்பஸும் நம்பிக்கொண்டிருந்தார். இப்போது அதே கடவுள்தான் தனக்கு இந்தக் கட்டையை அனுப்பியிருக்கவேண்டும் என்று நினைத்து மகிழ்ந்தார் கொலம்பஸ்.

கிட்டத்தட்ட ஆறு மைல் தொலைவுக்கு அவர் நீந்திகொண்டே இருந்தார். போர்ச்சுகலின் கரையோரம் ஒதுங்கியபோதுதான் அவருக்கு நிம்மதியே பிறந்தது. கொள்ளையர்களிடம் இருந்தும் அவர்களைக் காட்டிலும் தீவிரமான கடலில் இருந்தும் தப்பிவிட்டோம் என்னும் நினைப்பே அவருக்கு ஆனந்தத்தைக் கொடுத்தது. அப்படியே கண்களை மூடிக்கொண்டார் கொலம்பஸ். ‘கடவுளே உனக்கு நன்றி. நிச்சயம் எனக்காக நீ சில திட்டங்களை வைத்திருப்பாய் என்று தெரிகிறது. அதனால்தான் நீ என்னைக் காப்பாற்றிருக்கிறாய். நிச்சயம் நான் உன் நம்பிக்கையை வீணடிக்கமாட்டேன். சொல், நான் உனக்காக என்ன

செய்யவேண்டும்?’

கொஞ்சம் அல்ல, நிறையவே செய்யவேண்டும் என்று பதிலளித்தது வரலாறு.

*

கொள்ளையர்களிடம் இருந்து தப்பி போர்ச்சுகலில் கரை ஒதுங்கிய கொலம்பஸ் லிஸ்பன் என்னும் நகரை அடைந்தார். அவருடைய வாழ்க்கையை மாற்றியமைத்தது அந்த நகரம். ஐரோப்பாவின் ஒவ்வொரு நகரில் இருந்தும் கப்பல்கள் அங்கே வந்து சென்றுகொண்டிருந்தன. ஒவ்வொரு கப்பலில் இருந்தும் பலவிதமான கதைகள் தரையிறங்கின. நான் அங்கே அதைப் பார்த்தேன், இங்கே இதைப் பார்த்தேன் என்று மாலுமிகள் சுவாரஸ்யமாகப் பேசிக்கொண்டார்கள்.

அப்போது கொலம்பஸின் சகோதரர் பார்த்தோலிமியோ லிஸ்பனில்தான் இருந்தார். வரைபடம் தயாரிக்கும் பணியில் அவர் ஈடுபட்டிருந்தார். அவரைப் பார்த்து கொலம்பஸும் வரைபடத்தின் மீது ஆர்வம் செலுத்தத் தொடங்கினார். புதிய இடங்களைக் கண்டறிந்த மாலுமிகளிடம் பேசி, தகவல்களைச் சேகரித்து, சரிபார்த்து வரைபடங்களில் மாற்றங்கள் செய்து வர ஆரம்பித்தார் கொலம்பஸ். விரைவில் கொலம்பஸின் வரைபடங்கள் புகழடையத் தொடங்கின. எந்த அளவுக்குத் தெரியுமா? துல்லியமான, நம்பகமான வரைபடம் வேண்டுமா, கொலம்பஸிடம் கேள் என்று ஊர் மக்கள் சொல்லும் அளவுக்கு.

சிறிய தீவுகள் தொடங்கி ஆப்பிரிக்கா கண்டம் வரை எங்கிருந்து மாலுமிகள் திரும்பினாலும் அவர்களை முதல் ஆளாக வரவேற்பவர் கொலம்பஸாகத்தான் இருப்பார். கையோடு அவர்களை அழைத்துச் சென்று, உபசரித்து அவர்களுடைய கதைகளை எல்லாம் கேட்டுக்கொள்வார். வழியில் அவர்களுக்குத் தென்பட்ட இடங்கள் பற்றித் தோண்டித் துருவி கேள்விகள் கேட்பார். பிறகு வீட்டுக்குப் போய் வரைபடத்தைப் பிரித்து வைத்துக்கொண்டு, தனக்குக் கிடைத்த புதிய தகவல்களை அதில் பதிவு செய்வார். புதிய தகவல்கள் ஓரளவுக்குச் சேர்ந்ததும் திருத்தப்பட்ட புதிய வரைபடத்தை விற்பனைக்கு வெளியிடுவார்.

ஸ்பானிஷ், போர்ச்சுகீஸ் உள்ளிட்ட மொழிகளையும் கற்கத் தொடங்கினார் கொலம்பஸ். வாய்ப்பு கிடைக்கும்போதெல்லாம் புதிய இடங்களுக்குக் கப்பலில் சென்று வருவதையும் வழக்கமாக்கிக் கொண்டார். ஆபத்தான சூறாவளிகளைச் சமாளிக்கும் ஆற்றலை வளர்த்துக்கொண்டார். பனி படர்ந்த பிரதேசங்களையும்

மேகமூட்டமான பகுதிகளையும் எப்படிக் கையாள்வது என்பதை நேரடியாகச் சென்று பார்த்து தெரிந்துகொண்டார். ஐஸ்லாந்துவரை சுற்றி வந்தார். ஆர்ட்டிக் பிரதேசத்தையும் விட்டுவைக்கவில்லை.

1300 தொடங்கி 1500 வரையிலான மத்திய காலத்தை மறுமலர்ச்சி காலகட்டம் என்று அழைப்பார்கள். கலை, இலக்கியம், அறிவியல், புவியியல், மருத்துவம் என்று பல துறைகளில் குறிப்பிடத்தக்க கண்டுபிடிப்புகளை ஐரோப்பியர்கள் நிகழ்த்தினார்கள். பூமியில் ஒளிந்திருக்கும் புதிய இடங்களைக் கண்டுபிடிக்கவேண்டும் என்னும் துடிப்பு ஐரோப்பியர்களுக்கு ஏற்பட்டது.

கொலம்பஸுக்கும் சில கனவுகள் இருந்தன. வரைபடத்தை உருவாக்குபவர் என்பதால் இயல்பாகவே புதிய இடங்களைக் கண்டறிவதில் அவருக்கு ஆர்வம் மிகுந்தது.

குறிப்பாக, ஐரோப்பாவில் இருந்து மேற்கே ஆசியா செல்வதற்கான நேரடி கடல் வழிப் பாதையைக் கண்டுபிடிக்கவேண்டும் என்று விரும்பினார் கொலம்பஸ். அப்போது ஆசியா செல்வதற்கு ஒரு வழிதான் இருந்தது. தெற்கு நோக்கி பயணம் செய்யவேண்டும். ஆப்பிரிக்கா என்னும் மிகப் பெரிய பிரதேசத்தைக் கஷ்டப்பட்டுச் சுற்றிவரவேண்டும். பிறகு அங்கிருந்து ஆசியா செல்லவேண்டும். தலையைச் சுற்றி மூக்கைத் தொடும் முறை.

கொலம்பஸ் தெற்குக்குப் பதிலாக மேற்கு நோக்கி முன்னேற விரும்பினார். அட்லாண்டிக் கடல் வழியாக மேற்கை அடைந்துவிட்டால் அங்கிருந்து ஆசியாவைச் சுலபமாகத் தொட்டுப் பிடித்துவிடலாம் அல்லவா? ஆசியா என்றால் கிழக்கிந்தியத் தீவுகள். அப்போதைய மாலுமிகள் அனைவருக்கும் இந்தத் தீவை அடைவதே வாழ்வின் ஒரே லட்சியம். கிழக்கிந்தியத் தீவுகளைச் சுலபமாக அடைந்துவிடமுடிந்தால் எக்கச்சக்கமான பயண நேரத்தையும் பயணச் செலவையும் மிச்சப்படுத்தமுடியும்.

போர்ச்சுகல் மன்னரை அணுகி, தன் கனவுத் திட்டத்தை விவரித்தார் கொலம்பஸ். அனுமதி கிடைக்கவில்லை. இங்கிலாந்து சென்றார். ம்ஹூம், பலனில்லை. இறுதியாக 1491-ம் ஆண்டு ஸ்பானிஷ் மன்னர் கொலம்பஸை ஆதரிக்க முன்வந்தார். வாக்களித்தபடியே கொலம்பஸ் புதிய இடத்தைக் கண்டுபிடித்துவிட்டால் அங்கு கிடைக்கும் செல்வத்தில் 10% அவருக்குக் கிடைக்கும். அந்த இடத்தின் கவர்னராக அவரே நியமிக்கப்படுவார். ராஜ மரியாதையும் அங்கீகாரமும்கூட கிடைக்கும்.

கொலம்பஸின் பயணத்திட்டம் சரியானது. பூமி உருண்டை என்பதால் மேற்கு நோக்கி நகர்வதன்மூலம் கிழக்கைத்

தொட்டுவிடமுடியும்தான். ஆனால் எவ்வளவு விரைவாக அது சாத்தியப்படும் என்பதற்கு கொலம்பஸ் போட்டுவைத்த கணக்கில் பிழை நேர்ந்துவிட்டது.

3 ஆகஸ்ட் 1492 அன்று, மூன்று கப்பல்களில் கொலம்பஸின் பயணம் தொடங்கியது. அந்தக் கப்பல்கள் தி நினா, தி பிண்டா, தி சாண்டா மரியா. எத்தனையோ பயணங்கள் சென்றிருந்தாலும் எவ்வளவோ புதிய இடங்களை வரைபடத்தில் குறித்திருந்தாலும் இந்தப் பயணம் முக்கியமானது என்பது கொலம்பஸுக்குத் தெரிந்திருந்தது. ‘கிழக்கிந்திய தீவுகளுக்கு விரைவில் சென்று சேர்ந்துவிடுவேன். அங்கிருந்து பொன்னும் பொருளும் ரத்தினங்களும் விலை மதிப்பற்ற கற்களும் கொண்டுவருவேன். இந்த ஊரின், உலகின் செல்வாக்கான பணக்காரனாக மாறுவேன். இது நடக்கத்தான் போகிறது!’ என்று பூரிப்படைந்தார் கொலம்பஸ்.

கானரி தீவுகளில் முதலில் கரை ஒதுங்கினார்கள். அங்கேயே சிக்கல் ஆரம்பித்துவிட்டது. மேற்கொண்டு முன்னேறுவதற்கான வானிலை அமையவேயில்லை. கப்பல் செல்வதற்கு வாகான காற்று வீசவில்லை. ஒரு கப்பலைப் பழுதுபார்க்கவும் வேண்டியிருந்தது. எனவே செப்டெம்பர் 6 வரை அங்கேயே அவர்கள் தங்கியிருக்கவேண்டியிருந்தது. பிறகு பயணம் ஆரம்பமானது. மேற்கே, இன்னும் மேற்கே போய்க்கொண்டே இருங்கள் என்று உத்தரவிட்டார் கொலம்பஸ்.

ஆனால் கப்பல் பணியாளர்களுக்கும் வீரர்களுக்கும் அதற்குள் அலுத்துவிட்டது. கப்பலில் ஏறி உட்கார்ந்த நாள் முதற்கொண்டு கொலம்பஸ் இதே உத்தரவைத்தான் மீண்டும் மீண்டும் பிறப்பித்துக்கொண்டிருந்தார். ‘நிற்காமல் சென்றுகொண்டே இருங்கள், இதோ மேற்கே நாம் எதிர்பார்த்த இடம் வந்துவிடும்!’ ஒருவருக்கும் புரியவில்லை. மேற்கில் அப்படி என்னதான் இருக்கிறது? எதிர்பார்த்த இடம் என்றால் என்ன? பெரிய வரைபட தயாரிப்பாளர் என்று நம்பி கொலம்பஸின் கப்பலில் ஏறியது தவறோ?

பணியாளர்கள் அடிக்கடி சோர்ந்து போவதைக் கண்ட கொலம்பஸ் ஓர் உபாயத்தைக் கண்டறிந்தார். ஒவ்வொரு கப்பலுக்கும் லாக் புக் என்று அழைக்கப்படும் குறிப்புப் புத்தகம் இருக்கும். இன்று எவ்வளவு தூரம் சென்றிருக்கிறோம், என்ன செய்திருக்கிறோம் என்பதையெல்லாம் குறித்து வைக்கும் நாளேடு அது. கொலம்பஸ் இரண்டு நாளேடுகளை உருவாக்கினார். ஒன்று, பொதுவாகப் பணியாளர்கள் பார்க்கும் இடத்தில் வைக்கப்பட்டிருக்கும். அந்தக் குறிப்பேட்டில் அன்றைய தினம் எவ்வளவு தூரம் சென்றார்களோ அதை எழுதாமல் எண்ணிக்கையைக் குறைத்து எழுதி வைப்பார்.

அதைப் பார்க்கும் பணியாளர்கள், ஓ, இன்னும் நாம் போகவேண்டிய தூரம் நிறைய இருக்கிறது என்று புரிந்துகொள்வார்கள் என்று எதிர்பார்த்தார் கொலம்பஸ். நிஜமான தூரத்தைக் குறிக்கும் லாக் புக் அவரிடம் ரகசியமாக இருந்தது.

இந்த உத்தி வெற்றிபெறவில்லை. அக்டோபர் மாதம் தொடங்கியபோது கப்பல் பணியாளர்கள் வெறுப்பின் உச்சத்துக்குச் சென்றுவிட்டார்கள். கண்ணுக்கு எட்டியவரை நிலம் எதுவும் தட்டுப்படவில்லை. மேலும் போ, மேலும் போ என்றால் எங்கேதான் போவது? இந்த வேதனை எப்போதுதான் முடியும்? வேறு வழியின்றி அவர்கள் கொலம்பஸை வெளிப்படையாக எதிர்க்கத் தொடங்கினார்கள். தனக்குத் தெரிந்த அனைத்து வழிகளையும் பயன்படுத்தி அவர்களை அமைதிபடுத்த முயன்ற கொலம்பஸ் இறுதியாக அறிவித்தார். ‘இன்னும் இரண்டு தினங்கள் பார்க்கலாம். நிலம் தட்டுப்படாவிட்டால் பயணத்தை ரத்து செய்துவிடலாம்.’

சொல்லிமுடித்த மறுநாளே நிலம் அகப்பட்டுவிட்டது. தொடங்கி பத்து வாரங்கள் கழிந்த பிறகு அக்டோபர் 12-ம் தேதி கொலம்பஸ் புதிய இடத்தில் கால்களைப் பதித்தார். திட்டமிட்டபடியே கிழக்கிந்திய தீவுகளை அடைந்துவிட்டோம் என்று உற்சாக முழக்கமிட்டார் கொலம்பஸ். அவரைக் கண்டு திகைத்து நின்ற பழங்குடிகளை இந்தியர்கள் என்று அழைத்தார் கொலம்பஸ்.

ஆனால் உண்மையில் அது கிழக்கிந்திய தீவும் அல்ல, அவர் சந்தித்தவர்கள் இந்தியர்களும் அல்ல. பஹாமா தீவுகள் என்று பின்னாளில் அழைக்கப்பட்ட ஓரிடம்தான் அது.

அதற்குப் பிறகு கியூபா தொடங்கி பல கரீபிய தீவுகளைச் சுற்றிவந்தார். மனிதர்கள் யாரும் கால் பதிக்காத புதிய உலகைக் கண்டுபிடித்துவிட்டேன் என்னும் திருப்தி அவருக்கு ஏற்பட்டது. அப்படியானால் அந்தத் தீவுகளில் ஏற்கெனவே பல காலமாக வசித்துவந்த பழங்குடிகள் யார் என்பதையெல்லாம் அவர் யோசிக்கவேயில்லை. கொலம்பஸ் அந்தப் பழங்குடிகளை மதிக்கவேயில்லை என்பதோடு அவர்களோடு பலத்த மோதலிலும் ஈடுபட்டார்.

கொலம்பஸ் ஆஹா ஓஹோ என்று பாராட்டப்பட்டார். மேலும் இரு முறை பயணங்கள் மேற்கொண்ட கொலம்பஸ் தென் அமெரிக்கா, மத்திய அமெரிக்கா ஆகிய பகுதிகளுக்குச் சென்று வந்தார். யுஎஸ்ஏ என்று அழைக்கப்படும் வட அமெரிக்காவில் அவர் கால் பதிக்கவேயில்லை. ஆக, கொலம்பஸ் கிழக்கிந்திய தீவுகளையும் கண்டறியவில்லை, அமெரிக்காவிலும் கால் பதிக்கவில்லை. இருந்தாலும் அமெரிக்காவைக் கண்டறிந்தவர் என்னும் பெயர்

அவருடன் ஒட்டிக்கொண்டுவிட்டது.

- தொடக்க காலத்தில், காற்று வீசும் திசையைக் கொண்டு கப்பலை இயக்கினார்கள். பிறகு, வானத்தில் தென்பட்ட குறிப்பிட்ட சில நட்சத்திரங்களின் உதவியால் திசையைக் கண்டறிந்தார்கள்.
- துல்லியமாகத் திசைகளைக் காட்டக்கூடிய காம்பஸ் கண்டுபிடிக்கப்பட்ட பிறகும் நட்சத்திரங்களும் காற்றும் மாலுமிகளுக்கு உதவியாகவே இருக்கின்றன.
- துறைமுகங்கள், நகரங்கள், தீவுகள், கடல் எல்லைகள் ஆகியவற்றைத் தெரிந்துகொள்ள வரைபடங்கள் உதவின. ஒவ்வொரு முக்கியப் பயணத்துக்குப் பிறகும் வரைபடங்கள் திருத்தப்பட்டன.
- நீண்ட பயணங்களை மேற்கொள்ள வசதியாகக் கப்பல்கள் பெரியதாகவும் நவீனமாகவும் மாற்றப்பட்டன. சூறாவளிகளால் தாக்கப்பட்டாத அளவுக்கு வலிமையானவையாக அவை மாற்றப்பட்டன.
- கொலம்பஸ் பயன்படுத்திய கப்பல்கள் அளவில் சிறியனவாக இருந்தன. இருப்பதிலேயே சிறியது நினா. அது 70 அடி நீளம் மட்டுமே இருந்தது. நினா என்பது புனைப்பெயர், நிஜப்பெயர் சாண்டா கிளாரா. சாண்டா மரியா என்பது கொலம்பஸ் சூட்டிய பெயர்.
- கொலம்பஸின் கண்டுபிடிப்பு தவறானது என்பதையும் அவர் கால் பதித்தது கரீபியின் பகுதிகளில்தான் என்பதையும் 1502-ம் ஆண்டு அமெரிகோ வெஸ்புகி எனும் இத்தாலியப் பயணி நிரூபித்தார். பிற்காலத்தில் அவர் பெயரே அமெரிக்காவுக்கு சூட்டப்பட்டது.
- ரஷ்யர்கள், சீனர்கள், வைகிங்குகள் ஆகியோர் ஏற்கெனவே அமெரிக்காவில் கால் பதித்திருந்தனர். ஆனால் இதை மேற்கு ஐரோப்பியர்கள் அறிந்திருக்கவில்லை.
- ஆசைப்பட்டதைப் போலவே பணக்காரராக மாறினார் கொலம்பஸ். ஆனால் பழங்குடிகளை அவர் நடத்திய விதம், பணத்தையும் பதவியையும் சரிவர நிர்வாகம் செய்யாதது ஆகியவற்றால் மதிப்பையும் மரியாதையையும் அவர் இழந்து போனார். அவரை ஸ்பெயின் கைதும் செய்தது.
- கொலம்பஸ் இன்று புகழுடன் இருப்பதற்குக் காரணம் அவருடைய 1492 பயணத்துக்குப் பிறகு ஸ்பெயினின் வர்த்தகர்கள் அந்த வழித்தடத்தைப் பின்பற்றி செல்வத்தைப்

பெருக்கினர். மாபெரும் பேரரசாக ஸ்பெயின் வளர்ந்தது.

# 6. அமெரிகோ வெஸ்புகி

## அமெரிக்காவை நிஜமாகவே கண்டுபிடித்தவர்

‘ஒரு வேலையை ஒழுங்காகச் செய்யத் தெரியாதா உனக்கு?’ அமெரிகோ வெஸ்புகியை அறிந்தவர்கள் அனைவரும் இந்தக் கேள்வியை அவரிடம் ஒருமுறையாவது எழுப்பியிருப்பார்கள். ஒரு வேலையில் அப்போதுதான் சேர்ந்திருப்பார். அடுத்தமுறை பார்க்கும்போது, அதை விட்டுவிட்டு இன்னொரு வேலையில் இருப்பார். நகைக்கடையில் சேர்ந்திருக்கிறேன் என்பார். இல்லை அது சரியில்லை இப்போது சொந்தத் தொழில் செய்கிறேன் என்பார். அப்படியா என்ன தொழில் என்று கேட்பதற்குள் அவர் மனம் மாறிவிடும். இப்படி அங்கே இங்கே, அது இது என்று சுற்றித் திரிந்துவிட்டு இறுதியாக 45-வது வயதில் கடல் பயணத்தில் ஆர்வம் செலுத்தத் தொடங்கினார்.

இனி கடல்தான் என் வாழ்க்கை என்று அவர் அறிவித்தபோது, வழக்கம்போல் நண்பர்கள் அவரை நம்பவில்லை. இன்னும் சில மாதங்களில் கப்பலைத் தூக்கிப் போட்டுவிட்டு வேறொரு வேலையில் சேர்ந்துகொள்வார் என்று அவர்கள் திடமாக நம்பினார்கள். ஆனால் முதல்முறையாக அமெரிகோ தன் நண்பர்களின் நம்பிக்கையைப் பொய்யாக்கினார். கடல் மீதான அவர் ஆர்வம் நாளுக்கு நாள் அதிகமாகிக்கொண்டே போனது. அது மட்டுமின்றி, வெகு விரைவிலேயே முக்கியமான ஒரு கடல் பயணியாக அவரை மக்கள் அங்கீகரிக்கவும் தொடங்கிவிட்டனர்.

கரீபியின் தீவுகள் அமெரிகோவைக் கவர்ந்தன. வெறுமனே சுற்றிப் பார்க்கவேண்டும் என்று தொடங்கிய ஆர்வம் நாள்பட நாள்பட அதிகரிக்கத் தொடங்கியது. கிழக்கிந்திய தீவுகள் குறித்தும் இந்தியா குறித்தும் இதுவரை ஒருவரும் கண்டுபிடிக்காத புதிய பகுதிகள் குறித்தும் அவர் கனவு காண ஆரம்பித்தார். அமெரிகோ கடலை நேசிக்க ஆரம்பித்த ஆண்டு 1499. அதாவது, கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்ததாகச் சொன்ன 1492-ம் ஆண்டுக்குப் பிறகு. நாம் முன்பே பார்த்ததுபோல், கொலம்பஸ் கண்டுபிடித்தது அமெரிக்காவை அல்ல, பஹாமாஸ் தீவுகளைத்தான். ஆனால்

அதையே அவர் அமெரிக்கா என்று நினைத்திருந்தார்.

கொலம்பஸின் தவறைச் சுட்டிக்காட்டியவர்களில் முதன்மையானவர் அமெரிகோ. 1501-ம் ஆண்டு தற்போதைய தென் அமெரிக்காவில் உள்ள பேடகோனியா என்னும் பகுதிக்கு வந்துசேர்ந்தார் அமெரிகோ. ரியோ டி ஜெனிரோ பகுதியையும் அவர் பார்த்தார். இதையெல்லாம் பார்க்க பார்க்க அவருக்கு வியப்பு ஏற்பட்டது. இந்தப் பகுதிகள் எல்லாம் ஆசியாவில் இருந்து பெரிதும் வேறுபட்டிருந்ததை அவர் கண்டார். இந்தப் பகுதிகள் ஆசியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் இதுவரை அறிமுகமாகாதவை என்பதையும் அவர் தெரிந்துகொண்டார்.

இப்போது நாம் அமெரிக்கா என்று அழைக்கும் கண்டம் இதுவே. கொலம்பஸ் கண்டடைந்தது இந்த அமெரிக்காவை அல்ல. தன் கண்டுபிடிப்பை அமெரிகோ பகிர்ந்துகொண்டபோது உலகம் திகைத்துப்போனது. இப்போதுதான் கப்பலில் காலடி எடுத்து வைத்திருக்கும் ஊர், பேர் தெரியாத ஒரு மாலுமி, கொலம்பஸையே தவறு என்று சொல்கிறாரே? இவரை நம்பலாமா? கொலம்பஸைக் காட்டிலும் திறமையானவரா இவர்? அவரையே மறுத்துப் பேசும் அளவுக்கு இவர் அதற்குள் வளர்ந்துவிட்டாரா?



அமெரிகோ வெஸ்புகி

ஆனால் அமெரிகோ உறுதியாக இருந்தார். என்னை நம்புங்கள், கொலம்பஸ் புதிதாக எதையும் கண்டுபிடிக்கவேயில்லை. அவர் கிழக்கிந்திய தீவுகளுக்கு மட்டுமல்ல, ஆசியாவுக்கே சென்றதில்லை என்று சாதித்தார். அமெரிக்கா என்று இன்று அழைக்கப்படும் பிரதேசம் தனி கண்டமல்ல; அது இரண்டாகப் பிரிந்து கிடக்கிறது என்று அறிவித்தார் அமெரிகோ. வட அமெரிக்கா என்பது தனியொரு பிரதேசம். தென் அமெரிக்கா தனி. இது கொலம்பஸுக்குத் தெரியவில்லை. அவருக்கு மட்டுமல்ல, ஐரோப்பா, ஆசியா, ஆப்பிரிக்கா என்று எந்த நாட்டில் இருப்பவர்களுக்கும் தெரியவில்லை என்பதை அமெரிகோ புரியவைத்தார்.

அமெரிகோ இத்தாலியில் பிறந்தவர். ஆனால் அவருடைய கடல் பயணங்களை ஆதரித்தவர் ஸ்பெயின் அரசரான ஃபெர்டினாண்ட். கொலம்பஸுக்கே சவால்விடும் அமெரிகோவால் நிச்சயம்

சாதனைகளைப் படைக்கமுடியும் என்று அரசர் நம்பினார். கப்பலைச் செலுத்த கற்றுத் தரும் பயிற்சிப் பள்ளி ஒன்றைத் தொடங்கி அமெரிகோவை அதற்குப் பொறுப்பாக்கினார். அமெரிகோவின் ஆர்வம் பலமடங்கு அதிகரித்தது. தன்னுடைய கடல் பயணங்கள் மூலம் தொடர்ச்சியாகப் புதிய விஷயங்களை அவர் கற்றுக்கொண்டே வந்தார். அனைத்தையும் அவர் மக்களிடம் பகிர்ந்துகொண்டார்.

அமெரிகோவை மக்கள் கொஞ்சம் கொஞ்சமாக நம்பவும் மதிக்கவும் தொடங்கினர். ஒரு கட்டத்தில் அமெரிகோவை விட்டால் இந்த உலகைப் புரிந்துகொள்ள வேறு வழியே இல்லை என்னும் அளவுக்கு அவருக்கு உயர்வான இடத்தை அளித்து மரியாதை செலுத்தவும் தொடங்கினார்கள். அமெரிகோவும் புதிது புதிதாகப் பல கண்டுபிடிப்புகளை நிகழ்த்திக்கொண்டே இருந்தார். வரைபடங்களைத் திருத்தினார். புதிய வரைபடங்களை உருவாக்கினார். கடல் பயணத்தை மேலும் துல்லியமாக, அறிவியல்பூர்வமாக மாற்ற முடியுமா என்று ஆராய்ந்தார்.

பயணம் மேற்கொள்ளும்போதே தன்னுடைய ஐரோப்பிய நண்பர்களுக்குக் கடிதங்கள் எழுதினார் அமெரிகோ. தான் கண்ட புதிய பிரதேசங்களை அதில் அவர் விவரித்திருந்தார். பழங்குடி மக்களின் நடை, உடை, உணவு வழக்கங்களையும் அவர் பகிர்ந்துகொண்டார். அவர்களுடைய கடவுள் யார், அந்தக் கடவுளை எப்படி வழிபடுகிறார்கள் என்பதையும் அவர் அறிந்துகொள்ள விரும்பினார். அமெரிகோ எழுதிய கடிதங்களும் கட்டுரைகளும் திரட்டப்பட்டு புத்தகங்களாக வெளிவரத் தொடங்கின. அமெரிகோவின் புகழ் மேலும் பரவியது.

25 ஏப்ரல் 1507 அன்று வெளிவந்த வரைபடத்தில்தான் முதல் முறையாக அமெரிக்கா என்னும் பெயர் பயன்படுத்தப்பட்டது. இந்தப் பெயர் எப்படி வந்தது தெரியுமா? அமெரிகோவிடம் இருந்துதான். ஆம், கொலம்பஸ் அல்ல அமெரிகோவே புதிய கண்டத்தைக் கண்டுபிடித்தார் என்பதால் அவர் பெயரை அந்தக் கண்டத்துக்குச் சூட்டுவதுதான் சரியானது என்று இந்த வரைபடத்தை உருவாக்கிய ஜெர்மானியர் ஒருவர் நினைத்தார். அதுவரை அந்தப் பிரதேசங்களுக்கு புதிய உலகம் என்னும் பெயர்தான் இருந்தது. மேலும் சிலர் வேறு பெயர்களை வைத்திருந்தார்கள்.

இதுவரை அறியப்படாத புதிய உலகத்தை தெளிவாகவும் ஆணித்தரமாகவும் விவரித்த முதல் கடல் பயணி அமெரிகோ வெஸ்புகி என்பதை உலகம் ஏற்றுக்கொண்டது. அமெரிக்கா என்பது ஒரு கண்டமல்ல, இரண்டு கண்டங்கள் என்பதைக் கண்டுபிடித்தவர் அவரே என்பதால் வட அமெரிக்கா, தென் அமெரிக்கா என்று இரு

பெயர்களில் அந்தப் புதிய உலகம் பிரிக்கப்பட்டது. இரண்டிலும் அமெரிகோவின் பெயர் நிலைத்துநின்றது.

கொலம்பஸின் தவறைக் கண்டறிந்தவர் என்னும் பெயரோடு அந்தத் தவறைச் சரிசெய்தவர் என்னும் பெயரும் அமெரிகோவுக்கு வந்துசேர்ந்தது. அதற்குப் பிறகும் அமெரிகோ தொடர்ந்து பல பயணங்களை மேற்கொண்டார் என்றாலும் அவை பற்றிய செய்திகள் நமக்கு அதிகம் கிடைக்கவில்லை.

ஒன்று மட்டும் உறுதியாகச் சொல்லலாம். ‘ஒரு வேலையை ஒழுங்காகச் செய்யத் தெரியாதா உனக்கு?’ என்று அதற்குப் பிறகு ஒருவரும் அமெரிகோவைப் பார்த்து கேட்டிருக்க மாட்டார்கள் என்று நம்பலாம். இன்றுவரை அவர் பெயரை நாம் சொல்லிக்கொண்டிருக்கிறோம். இதைவிட வேறு பெரிய சாதனை என்ன இருக்கமுடியும்?

- அமெரிகோ பள்ளிக்கூடம் சென்றதே இல்லை. தனிப்பட்ட முறையில் தன் உறவினர்களிடம் இருந்து அவர் பாடங்கள் படித்துக்கொண்டார்.
- தனது 20-வது வயதில் முதல்முறையாக அவர் பாரிஸ் சென்றார்.
- கொலம்பஸின் கப்பல்களைத் தயார் செய்யும் பணியில் ஈடுபட்ட பலரில் அமெரிகோவும் ஒருவர். கொலம்பஸின் பயணக் குறிப்புகள் அமெரிகோவைக் கவர்ந்தன.
- அமேசான் ஆறு அமெரிகோவால் கண்டறியப்பட்டது என்று சிலர் சொல்கிறார்கள்.
- 1931-ம் ஆண்டு அமெரிகோவின் பெயரால் ஒரு கப்பலை உருவாக்கியது இத்தாலி. 2012- ம் ஆண்டு நாணயங்களில் அவர் உருவம் பொறிக்கப்பட்டது.

## 7. பார்த்தலோமியா டயஸ்

### ஆப்பிரிக்காவைச் சுற்றிவந்த கதை

புகழ்பெற்ற கடல் பயணியாக மாறுவதற்கு முன்பு போர்ச்சுகீசியரான பார்த்தலோமியா டயஸ் என்ன செய்துகொண்டிருந்தார் என்று தெரியவில்லை. பொருள்களைச் சேமித்து வைக்கும் அறையை நிர்வாகம் செய்யும் வேலையை அரசர் அவருக்கு அளித்திருந்தார் என்கிறார்கள் சிலர். யாரும் எதையும் திருடிச் சென்றுவிடாமல் பார்த்துக்கொள்வதுதான் அவர் வேலை. எவ்வளவு காலத்துக்குதான் ஒரே இடத்தில் உட்கார்ந்திருக்கமுடியும்? இதெல்லாம் ஒரு வேலையா என்னும் சலிப்பு வந்தபோது அரசர் வேறொரு வேலையை டயஸுக்கு அளித்தார். கப்பலில் ஏறி தூர நாடுகளுக்குச் செல்லவேண்டும், முடியுமா?

முடியுமாவா? இதற்காகத்தான் காத்திருக்கிறேன் என்று சுறுசுறுப்பாக ஒப்புக்கொண்டார் டயஸ். ஆசியா செல்வதற்கு ஒரு புதிய நீர் வழிப் பாதையைக் கண்டுபிடிக்கவேண்டும் என்பதுதான் அவருக்கு அளிக்கப்பட்ட பணி. ஓ, கண்டுபிடிக்கிறேனே என்று உற்சாகம் கொப்பளிக்க கப்பலில் ஏறி அமர்ந்தார் டயஸ். அதற்கு முன்பு அவர் கப்பலில் ஏறினாரா இல்லையா என்றுகூட ஒருவருக்கும் தெரியாது.

அது 1486-ம் ஆண்டு. இயற்கை வளங்கள் கொழிக்கும் ஆசியாவைத் தேடி 15 முதல் 17-ம் நூற்றாண்டு வரை தொடர்ச்சியாகப் பயணம் மேற்கொண்ட ஐரோப்பியர்களின் எண்ணிக்கை மலைக்க வைக்கக்கூடியது. நீங்கள் செல்ல விரும்பும் நாடு எது என்று எந்த ஐரோப்பியரைக் கேட்டாலும் அவர் இந்தியா அல்லது ஆசியா என்றுதான் சொல்வார். அனைவருக்கும் அது ஒரு கனவுப் பிரதேசம்.

பொதுவாக, துருக்கி (அப்போது கான்ஸ்டான்டினோபில்), இரான், ஆப்கனிஸ்தான் வழியாக நிலம் மார்க்கமாக ஐரோப்பியர்கள் ஆசியாவை அடைவது வழக்கம். ஆனால் 1453-ம் ஆண்டு நிலைமை மாறியது. 1500 ஆண்டுகளாக ஆதிக்கம் செலுத்திவந்த ரோமப் பேரரசு முடிவுக்குவந்து, ஓட்டோமான் சாம்ராஜ்ஜியம் ஆட்சியில் அமர்ந்தது. புதிய ஆட்சியாளர்களோடு மோதல் ஏற்படாமல் துருக்கியைக்

கடப்பது சாத்தியமில்லை என்பதால் ஐரோப்பியர்கள் நிலத்தை மறந்துவிட்டு கடல் நோக்கி திரும்பத் தொடங்கினார்கள். கடல் வழியாக, துருக்கியைத் தொடாமல் வேறு புதிய இடத்தைக் கண்டுபிடிக்க முடியுமா என்று அவர்கள் தேட ஆரம்பித்தார்கள்.

அவர்களில் ஒருவர் பார்த்தலோமியா டயஸ். புதிய நீர் வழியை ஒருவேளை டயஸ் கண்டுபிடித்துவிட்டால், பிறகு வணிகர்களை அங்கே அனுப்பிவைக்கமுடியும், நிறைய பண்ட பரிமாற்றங்கள் செய்யமுடியும், நிறைய செல்வமும் சேர்க்கமுடியும் என்று அரசர் நம்பினார். அதனால்தான் மூன்று கப்பல்களையும் தேவையான அளவுக்கு ஆள்களையும் அளித்து டயஸை அவர் அனுப்பிவைத்தார்.

டயஸுக்கு அளிக்கப்பட்ட பணி ஆப்பிரிக்காவைச் சுற்றிவருவது. ஆசியாவின் முனையை அடைந்து சுற்றி வரவேண்டும். இது சாத்தியப்பட்டால் பிறகு அங்கிருந்து ஆசியா செல்வது சாத்தியமாகிவிடும். இப்போதைக்கு ஆப்பிரிக்கா வழியாக ஆசியா செல்வது சாத்தியம்தான் என்பதை டயஸ் நிரூபிக்கவேண்டும். சொல்வதற்கு எளிமையாக இருந்தாலும் அது அவ்வளவு எளிதல்ல.

இருந்தாலும் டயஸ் அச்சமின்றி இருந்தார். கையில் அரசர் கொடுத்த வரைபடம் இருந்தது. அது போதாதா? கவலைப்படாதீர்கள், நீங்கள் எதிர்பார்த்ததைவிடவும் எளிதானது இந்தப் பயணம். இதோ, போன வேகத்தில் முடித்துக்கொண்டு திரும்பிவிடலாம் என்று கப்பல் ஊழியர்களுக்கு நிறைய நம்பிக்கையும் அளித்தார்.

ஒவ்வோர் ஆப்பிரிக்கத் துறைமுகமாகக் கடந்து சென்றார்கள். பெரும்பாலும் பழங்குடி மக்களே அப்போது அங்கு வாழ்ந்துவந்தனர். அவர்களிடம் சென்று கைகுலுக்கிக்கொண்டார் டயஸ். சில நேரம் அவருக்குப் பரிசுகள் கிடைத்தன. மகிழ்ச்சியுடன் பெற்றுக்கொண்டார். அடடா, இதுவல்லா வாழ்க்கை என்று மகிழ்ச்சி பொங்கி வழிந்தது. ஆப்பிரிக்காவின் முனையை எப்படியாவது கண்டடைந்துவிடவேண்டும் என்று அவர் உள்ளம் துடித்தது.

ஜனவரி 1488-ல் டயஸின் கப்பல்கள் தென் ஆப்பிரிக்காவை அடைந்தன. இதோ இன்னும் கொஞ்சம் தூரம்தான் என்று டயஸ் படபடபடத்தார். அப்போது பார்த்து திடீரென்று பெரும் மழையும் சூறாவளியும் தொடங்கிவிட்டன. டயஸே கொஞ்சம் மிரண்டுதான் போனார். நிலத்தில் பெய்யும் மழை வேறு, கடலில் பெய்யும் மழை வேறு என்பது அவருக்கு முதன்முதலாகப் புரிந்தது. வீட்டுக்குள் ஓடிச்சென்று கதவை மூடிக்கொண்டுவிட்டால் மழையின் உக்கிரம் குறைந்துவிடும். சுகமாகப் படுத்து தூங்கிவிடலாம். கடலில் செல்லும்போது சிறிய மழை பெய்தாலே உடல் நடுங்கிவிடும். சூறாவளி என்றால் கேட்கவே வேண்டாம்.

உஷ், உஷ் என்று அடித்த பெரும் காற்றில் சிக்கி கப்பல்கள் தடுமாற ஆரம்பித்தன. அந்த நேரம் பார்த்து டயஸுக்கு இன்னொரு விஷயமும் தெரியவந்தது. அவரிடம் இருந்த வரைபடம் தவறானது! அதன்படி போனால் காணாமல் போகவேண்டியதுதான். அது மலை என்று குறிப்பிடும் இடத்தில் மலை இல்லை. நிலம் என்று குறிப்பிட்ட பகுதியில் கடல்தான் இருந்தது.

இதென்ன சோதனை என்று வரைபடத்தை ஓரம் கட்டிவிட்டு சுயமாகவே அவர் முடிவெடுக்க ஆரம்பித்தார்.

வீசும் காற்றின் திசையை வைத்து ஓரளவுக்கு அவர் வழியை யூகித்துக்கொண்டார். தெற்கு நோக்கி கப்பலைத் திருப்புங்கள் என்று உத்தரவிட்டார். ஆனால் பணியாளர்களுக்கு நடுக்கம் ஆரம்பித்துவிட்டது. தப்பான வரைபடத்தையும் தப்பான நபரையும் நம்பி வந்துவிட்டோமே என்று அவர்கள் கவலைப்பட ஆரம்பித்தார்கள். டயஸ் சிரமப்பட்டு அவர்களுக்குப் புரியவைத்தார். ஆபத்துதான், ஆனால் இப்போதைக்கு நான் சொல்வதைக் கேட்பதைத் தவிர உங்களுக்கு வேறு வழி இல்லை. எப்படியாவது உங்களை மீண்டும் போர்ச்சுகல் அழைத்துச் சென்றுவிடுவேன் என்று சமாதானம் செய்தார்.

பிப்ரவரி 1488 வாக்கில் ஏதோவொரு நிலப்பகுதி தெரிவதுபோல் இருந்தது. இங்கும் பழங்குடியினர் இருந்தனர். சரி இவர்களும் வரவேற்று ஏதாவது பரிசு தருவார்கள் என்று நினைத்து நடக்க ஆரம்பித்தார் டயஸ். அவ்வளவுதான், எங்கிருந்து பாய்ந்து வருகின்றன என்றே கண்டுபிடிக்கமுடியாத அளவுக்குக் கற்கள் அடுத்தடுத்து தாக்கின. மிரண்டு போன டயஸ் பதிலுக்குத் தாக்குதல் நடத்தி பழங்குடிகளை வீழ்த்தினார்.

இது முடிந்ததும் அடுத்த பிரச்னை முளைத்தது. கப்பலில் உணவுப் பொருள்கள் குறைய ஆரம்பித்தன. என்ன, ஏது என்று பார்ப்பதற்குள் கப்பல் பணியாளர்கள் பலர் ஒன்றுதிரண்டு டயஸுக்கு எதிராகக் கொடி பிடிக்க ஆரம்பித்தார்கள். இனியும் உங்களோடு சேர்ந்திருக்க மாட்டோம், உங்கள் கட்டளைக்குக் கட்டுப்பட மாட்டோம் என்று அவர்கள் உறுதியாக நின்றனர். நிலமும் காணோம், உணவும் இல்லை. உதவாத வரைபடத்தை வைத்துக்கொண்டு இன்னும் எவ்வளவு ஆபத்தைதான் சந்திக்கமுடியும் என்று அவர்கள் கோபம் கொண்டார்கள். சரி, இன்னும் சில தினங்கள் பார்ப்போம், முடியாவிட்டால் திரும்பிவிடலாம் என்று ஒருவழியாக உடன்படிக்கை செய்துகொண்டு மேலும் முன்னேறினார் டயஸ்.

நல்லவேளையாக, அவர் சொன்னதைப் போலவே சில தினங்களில் ஆப்பிரிக்காவின் முனையை அவர்கள் வந்தடைந்தார்கள். அல்லது,

அதுதான் ஆப்பிரிக்காவின் முனை என்று டயஸ் ஏற்றுக்கொண்டார். இதற்கு மேல் போக முடியாது என்பது அவருக்குத் தெரியும். சரி திரும்பலாம், நம் பயணம் முடிவடைந்துவிட்டது என்று அறிவித்து கப்பலை போர்ச்சுகலை நோக்கித் திருப்பினார் டயஸ். அவருக்கு இறுதிவரை குழப்பமாகவே இருந்தது. நாம் உண்மையிலேயே சரியான இடத்தை வந்தடைந்துவிட்டோமா? அரசர் சொன்ன காரியத்தை முடித்துவிட்டோமா?

15 மாதங்கள் கழித்து போர்ச்சுகலின் தலைநகரம் லிஸ்பனை அடைந்தபோது ஊரே திரண்டுவந்து வாழ்த்தி டயஸை வரவேற்றது. நீங்கள் உண்மையிலேயே பெரிய சாதனையாளர்தான், உயிருடன் வந்துவிட்டீர்களே என்று பலரும் வாழ்த்தினார்கள். கிட்டத்தட்ட 16,000 மைல்களை டயஸின் கப்பல்கள் கடந்திருந்தன. அதை ஒரு சாதனையாகவே பலரும் கருதினார்கள். ஆனால் அரசரிடம் உரையாடும்போது டயஸ் நேர்மையாக ஒப்புக்கொண்டார். நான் ஆப்பிரிக்கா சென்று வந்தது என்னவோ உண்மைதான், ஆனால் குறிப்பிட்ட இலக்கை அடைந்துவிட்டேனா என்று தெரியவில்லை!

அரசருக்கு வருத்தம்தான். ஆனால் அவர் கோபப்படவில்லை. நீங்கள் கண்ட ஆப்பிரிக்காவின் முனை, நம்பிக்கை ஏற்படுத்துவதாக இருக்கிறது. அடுத்தடுத்த பயணங்களில் நிச்சயம் ஆசியாவை இதே வழியில் சென்று அடைந்துவிடமுடியும் என்று நம்புகிறேன். அந்த நம்பிக்கையை ஏற்படுத்தியதால், நீங்கள் கண்டுபிடித்த நிலப்பகுதிக்கு நன்னம்பிக்கை முனை என்று பெயர் சூட்டுகிறேன் என்று அறிவித்தார் அரசர். ’கேப் ஆஃப் குட் ஹோப்’ என்று அது இன்று அழைக்கப்படுகிறது.

டயஸுக்கு இன்னொரு வேலையும் கொடுக்கப்பட்டது. அடுத்த பயணத்துக்குச் செல்ல இருந்த வேறொரு பயணிக்காக கப்பல்களை உருவாக்கும் வேலை நடந்துகொண்டிருந்தது. அதில் ஈடுபடுமாறு டயஸை அரசர் கேட்டுக்கொண்டார். உற்சாகமாக டயஸ் அவருக்கு உதவிகள் செய்தார். அந்த இன்னொரு பயணி, டயஸ் ஆரம்பித்து வைத்த வேலையைக் கச்சிதமாக முடித்து வைத்தார். அதே வழித்தடத்தில் சென்று, இந்தியாவை வெற்றிகரமாக வந்தடைந்தார். அவரை நாம் ஏற்கெனவே சந்தித்திருக்கிறோம். பெயர், வாஸ்கோ ட காமா!

- அட்லாண்டிக் பெருங்கடலில் இருந்து இந்தியப் பெருங்கடலை வந்தடைந்த முதல் ஐரோப்பியர் பார்த்தலோமியா டயஸ்.
- வாஸ்கோ ட காமாவுடன் இணைந்து ஒரு கட்டம் வரை அவருடைய கப்பலில் சென்றார் டயஸ்.

- கப்பல் கட்டும் பணியில் தொடர்ந்து டயஸ் ஈடுபட்டு வந்தார். ஒருமுறை பிரேசில் செல்லும் வாய்ப்பு வந்தது. ஆனால் இறுதிவரை அவர் ஆசியாவுக்கு வரவேயில்லை.
- நம்பிக்கை முனைக்கு அருகில் ஏற்பட்ட சூறாவளியில் அவர் கப்பல் 1500-ல் சிக்கிக்கொண்டபோது டயஸ் இறந்து போனார்.

# 8. மெகல்லன்

## உலகைச் சுற்றிய கப்பல்

உலகை முதல் முதலில் வலம்வந்தவர் ஃபெர்டினண்ட் மெகல்லன் என்று சொன்னால் அது முழு உண்மையல்ல. ஆனால், முதலில் உலகை வலம்வந்தது மெகல்லனின் கப்பல்தான் என்று உறுதியாகச் சொல்லமுடியும். மெகல்லன் இல்லாமல் அவர் கப்பல் மட்டும் எப்படித் தனியாக ஊரைச் சுற்றிவரும் என்று குழம்ப வேண்டாம். இன்னொரு விநோதத்தையும் இப்போதே தெரிந்துகொண்டு விடுங்கள்.

வாஸ்கோ ட காமா பிறந்து 20 ஆண்டுகள் கழித்து அதே போர்ச்சுகல் நாட்டில் மெகல்லன் பிறந்தார். ஐரோப்பாவில் இருந்து ஆப்பிரிக்கா வழியாக இந்தியாவைத் தொட்டது வாஸ்கோ ட காமாவிமின் சாதனை என்றால் மெகல்லனின் கனவு உலகை முதல் முறையாக வலம்வரவேண்டும் என்பது. இந்தக் கனவில் அவர் பெரும் வெற்றியும் பெற்றார்.

ஆனால் பாருங்கள் இன்றும் போர்ச்சுகலைச் சேர்ந்த வரலாற்று ஆசிரியர்கள் மெகல்லனை ஆஹா ஓஹோ என்றெல்லாம் புகழ மாட்டார்கள். உங்கள் நாட்டைச் சேர்ந்தவர்தானே, அவருடைய சாதனை மிகப் பெரியது அல்லவா என்று கேட்டால் அவர்கள் என்ன பதில் சொல்வார்கள் தெரியுமா? மெகல்லன் பிறந்தது என்னவோ இங்கேதான், ஆனால் அவர் ஸ்பெயின் மன்னரின்

உதவியுடன்தான் பயணம் மேற்கொண்டார். எனவே அங்கே போய்க் கேட்டுக்கொள்ளுங்கள்!

சரி, ஸ்பெயினுக்குச் சென்று கேட்கலாம் என்றால் அவர்களும் முகத்தைத் திருப்பிக்கொள்வார்கள். அடப்பாவமே, உங்கள் மன்னரின் உதவியுடன்தானே மெகல்லன் புகழ்பெற்றார். நீங்கள் இதற்காகப் பெருமைப்பட வேண்டும் அல்லவா என்று கேட்டால், அவர்கள் பதிலுக்கு என்ன சொல்வார்கள் தெரியுமா? எங்கள் மன்னர் உதவி செய்தது உண்மைதான், ஆனால் அவர் பிறந்தது போர்ச்சுகலில்தானே? அங்கே போய் அவர் அருமை பெருமைகளை விசாரித்துக்கொள்ளுங்கள் என்று நகர்ந்து விடுவார்கள்.

கொஞ்சம் பாவம்தான் இந்த மெகல்லன், இல்லையா? ஆனால் நல்லவேளையாக இவர் புகழ் சர்வதேச அளவில் பரவியிருப்பதால் பிழைத்துக்கொண்டார். மெகல்லன் உலகை வலம்வந்த கதையைப் பார்ப்பதற்கு முன்னால் சுருக்கமாக அவரை ஒரு வலம் வந்துவிடலாம்.

மெகல்லன் காலத்தில் ஐரோப்பாவில் போர்ச்சுகலும் ஸ்பெயினும்தான் வல்லரசுகளாக இருந்தன. (இந்த இரண்டையும் சேர்த்து ஐபீரியன் தீபகற்பம் என்று அழைப்பார்கள்). இங்கிருந்த வணிகர்கள், அரசர்கள், மாலுமிகள், பொதுமக்கள் எல்லோருக்கும் அப்போது பொதுவாக இருந்த ஒரே விருப்பம் மசாலாப் பொருள்கள். இறைச்சியைப் பாதுகாக்கவும் உணவுக்குச் சுவையூட்டவும் மிளகு, ஏலக்காய், இஞ்சி, பட்டை உள்ளிட்ட மசாலாப் பொருள்களை அவர்கள் விரும்பிப் பயன்படுத்தினர். எனவே அவற்றுக்கு அளவுக்கு அதிகமான கிராக்கி இருந்தது.



ஃபெர்டினண்ட் மெகல்லன்

இந்த மசாலாப் பொருள்களின் தாய் வீடு ஸ்பைஸ் தீவுகள் (தற்போதைய பெயர் இந்தோனேஷியா). இங்கே நூற்றுக்கணக்கான

சிறிய தீவுகள் இருந்தன. முதலில் அராபியர்களுக்கு மட்டுமே இந்தத் தீவுகள் தெரியும். பின்னர் வாஸ்கோ ட காமா இந்தியாவுக்குப் பயணம் மேற்கொண்டதைத் தொடர்ந்து போர்ச்சுகீசியர்களுக்கும் இந்தத் தீவுகளின் மதிப்பு தெரிந்துவிட்டது. அதற்குப் பிறகு ஸ்பைஸ் தீவுகள் மட்டுமல்ல, ஒட்டுமொத்த ஆசியாவும் ஐரோப்பியர்கள் மத்தியில் பிரபலமாகிவிட்டது. ஆசியாவைக் குறிவைத்து பிறகு கொலம்பஸ் தன் பயணத்தை மேற்கொண்டார். அவருக்குப் பிறகு மெகல்லன்.

மெகல்லனின் ஆரம்ப வாழ்க்கை இதுவரை மர்மமாகவே இருக்கிறது. அவரைப் பற்றி நமக்கு அதிக தகவல்கள்

கிடைக்கவில்லை. இங்கே வசித்திருக்கலாம், அங்கே படித்திருக்கலாம் என்பது போன்ற யூகங்கள்தான் இருக்கின்றன. உறுதியாகத் தெரியவரும் தகவல்கள் என்று பார்த்தால், இள வயதில் மெகல்லன் போர்ச்சுகல் அரண்மனையில் பணியாளராகச் சேர்ந்திருக்கிறார். அப்படியொன்றும் கடினமான வேலை இல்லை என்றாலும் நாள் முழுக்க ஏதாவது வேலைகள் இருந்துகொண்டே இருக்குமாம்.




**'விக்டோரியா' மெகல்லன் உலகைச் சுற்றிய கப்பல்**

எப்படிப்பட்ட வேலைகள் தெரியுமா? ராஜ குடும்பத்தினர் அரண்மனைக்கு வரும்போது முதுகை வளைத்து வணக்கம் செலுத்தவேண்டும். பணிவாக அவர்கள் பின்னால் ஊர்வலம் போகவேண்டும். மன்னருக்கோ மற்றவர்களுக்கோ பொழுதுபோகவில்லை என்றால் அவர்களைக் குஷிப்படுத்தவேண்டும். எப்படி? வேடிக்கை ஏதாவது செய்யலாம். கதை சொல்லலாம். விடுகதை போடலாம். நகைச்சுவை சம்பவங்களைச் சொல்லி கொல்லென்று சிரிக்க வைக்கலாம். தேவைப்படும்போது நடனமாடலாம். இதையெல்லாம் மீண்டும் மீண்டும் தினமும் செய்துகொண்டே இருக்கவேண்டும்.

ஒருவேளை இதை மட்டுமே மெகல்லன் செய்துகொண்டிருந்தால் அவரை நாம் எப்போதோ மறந்துபோயிருப்போம். சலாம் போடும் நேரம் போக மற்ற நேரங்களில் தன்னைச் சுற்றி நடைபெறும் நிகழ்வுகளையும் அரண்மனைக்கு வந்து போகும் விதவிதமான

மனிதர்களையும் ஆர்வத்துடன் கவனிக்க ஆரம்பித்தார். அவர் வாழ்க்கை மாற ஆரம்பித்தது.

மெகல்லன் சந்தித்த பலர் வணிகர்களாகவும் மாலுமிகளாகவும் கப்பல் அதிகாரிகளாகவும் இருந்தனர். அவர்களுடைய நடை, உடை, பழக்கவழக்கம், பேச்சுமுறை அனைத்தும் அவரைக் கவர்ந்தது. குறிப்பாக, ஸ்பைஸ் தீவுகள் குறித்து அவர்கள் பேசிக்கொண்டதை மெகல்லன் உன்னிப்பாகக் கேட்டுக்கொண்டார். அங்கே போவதற்கு போர்ச்சுகலில் இருந்து புதிய வழிகளைக் கண்டறியவேண்டிய அவசியம் பற்றி அவர்கள் பேசிக்கொண்டதைக் கேட்டபோது மெகல்லனுக்கும் அதில் மெல்ல மெல்ல ஆர்வம் வந்துவிட்டது.

அப்படி என்னதான் இருக்கிறது அந்தத் தீவுகளில்? மிளகையும் ஏலக்காயையும் ஏன் இவர்கள் இவ்வளவு ஆர்வத்துடன் தேடுகிறார்கள்? அவை அங்கே மட்டும்தான் கிடைக்குமா? அங்கே போவது அவ்வளவு கஷ்டமா? ஆசியா, ஆசியா என்கிறார்களே அது எங்கே இருக்கிறது? அங்கே வேறு என்னென்ன நாடுகள் இருக்கின்றன? அங்கே யாரெல்லாம் வசிக்கிறார்கள்?

அடுத்து அவர் ஆர்வம் கப்பல் மீது திரும்பியது. ஒரு பெரிய கப்பலில் என்னையும் யாராவது ஏற்றிச் சென்றால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று அவர் மனம் ஏங்கத் தொடங்கியது. அப்படியொரு வாய்ப்பு வரும்போது அதைப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும் என்னும் விருப்பத்துடன் கப்பல் பயணம் குறித்துச் சில அடிப்படைகளை அறிந்துகொள்ளத் தொடங்கினார்.

கடலில் இறங்கிய பிறகு எல்லாப் பக்கங்களிலும் நீர் மட்டும்தானே இருக்கும்? அதில் எப்படிக் கப்பலை ஓட்டிச் செல்வார்கள்? எந்தப் பக்கம் போகவேண்டும், எங்கே திரும்பவேண்டும், எங்கே பாதை மாறும், எது கிழக்கு, எது தெற்கு என்பதையெல்லாம் எப்படித் தெரிந்துகொள்வார்கள்? வெறுமனே கன்னத்தில் கை வைத்துக்கொண்டு, ஆகாயத்தைப் பார்த்து யோசித்துக்கொண்டிருக்கவில்லை மெகல்லன். ஒவ்வொரு கேள்விக்கும் விடை கண்டுபிடித்தே தீரவேண்டும் என்பதில் உறுதியாக இருந்தார்.

மாலுமிகளிடமும் அதிகாரிகளிடமும் பேச்சுக் கொடுத்து அவர்களுடைய கதைகளை ஆர்வத்துடன் கேட்டுக்கொண்டார். ஏகப்பட்ட கேள்விகளை அவர்களிடம் வீசி, பதில்களைப் பெற்றுக்கொண்டார். கப்பலில் எப்படி உணவு கொண்டு செல்வீர்கள்? எப்படி ஓய்வெடுத்துக்கொள்வீர்கள்? ஒரு பயணத்துக்கு எவ்வளவு செலவாகும்? ஒரு கப்பலில் எவ்வளவு பேர் ஏறலாம்? இப்படித் தனக்குத் தோன்றிய சின்ன, பெரிய சந்தேகங்கள்

அனைத்துக்கும் விடைகள் தேடிக்கொண்டார்.

பிறகு காம்பஸ் குறித்தும் வரைபடங்கள் குறித்தும் படிப்படியாகக் கற்றுக்கொள்ள ஆரம்பித்தார். கடல் அலைகளை எப்படிப் புரிந்துகொள்வது என்று கற்றுக்கொண்டார். கடல் பயணத்தின்போது புயலையும் மழையையும் எப்படிச் சமாளிப்பது என்பது புரிந்தது. மசாலாப் பொருள்களின் முக்கியத்துவத்தையும் உணர்ந்துகொண்டார். கடைக்கோடி ஆசாமி முதல் மன்னர் வரை அனைவரும் ஏன் மசாலாப் பொருள்களைத் தேடித்தேடி வாங்குகிறார்கள் என்பது புரிந்தது.

மெகல்லனையும் இப்போது ஆசை பிடித்துக்கொண்டு விட்டது. நாமும் கடலில் சென்றால் என்ன? ஸ்பைஸ் தீவுகளையும் அப்படியே ஆசியாவையும் ஒருமுறை கண்டுவந்தால் என்ன? அரண்மனை வாழ்க்கை எல்லாம் ஒரு வாழ்க்கையா? பாடுவதும் ஆடுவதும் சலாம் போடுவதும் சுலபமாக இருக்கலாம். ஆனால் அதில் சுவாரஸ்யம் என்ன இருக்கிறது? கடல் நீரில் கால் பதிப்பதை விட பெரிய இன்பம் வேறு என்ன இருக்கிறது?

ஒருநாள் அவர் காதுக்கு ஒரு செய்தி வந்தது. ஸ்பைஸ் தீவுகளுக்குச் செல்ல ஒரு புதிய வழித்தடத்தைக் கண்டுபிடித்து விட்டார்களாம். விரைவில் ஒரு கப்பல் அங்கே போகப்போகிறதாம். புகழ்பெற்ற ஒரு பெரிய மாலுமி அதனைச் செலுத்தப் போகிறாராம்.

மெகல்லனின் இதயம் வேக வேகமாகத் துடிக்கத் தொடங்கியது. அந்த மாலுமி யார் என்று விசாரித்தார். வாஸ்கோ ட காமா என்று சொன்னார்கள். அந்தக் கப்பலில் எனக்கும் இடம் கிடைக்குமா என்று கேட்டார். மன்னர் அனுமதித்தால் கிடைக்கும் என்று பதில் வந்தது.

ஓடிப் போனார் மன்னரிடம். இரண்டாம் ஜார்ஜ் மன்னர் இறந்து முதலாம் மானுவேல் அப்போது மன்னராகப் பொறுப்பேற்றிருந்தார். புதிய மன்னர் நிச்சயம் நம் கோரிக்கையை நிறைவேற்றுவார் என்னும் நம்பிக்கையுடன் அவரிடம் சென்று விண்ணப்பித்தார் மெகல்லன்.

மன்னர் மெகல்லனை ஒருமுறை ஏற, இறங்க பார்த்தார். இந்த அரண்மனைப் பணியாளருக்கு ஏன் இந்தத் தேவையில்லாத வேலை என்று நினைத்தாரோ என்னவோ!

‘நீ எதற்காக கப்பல், கிப்பல் என்று அநாவசியமாக அலையவேண்டும்? போ, போய் உன் வேலையைப் பார்’ என்று சொல்லிவிட்டார்.

பாவம், மெகல்லன்! ஆசையாசையாக அவர் கட்டியிருந்த கனவுக் கோட்டை உடைந்துவிட்டது. அவர் கண் முன்னால் வாஸ்கோ ட காமாவின் கப்பல் கிளம்பிச் சென்றுவிட்டது. நான்

போயிருக்கவேண்டிய கப்பல் என்று தனக்குள் சொல்லிச் சொல்லி வருத்தப்பட்டுக்கொண்டார்.

போய் வா, கப்பலே என்று முதுகை வளைத்து ஒரு முறை சலாம் போட்டார் மெகல்லன். பிறகு கண்கள் முழுக்கக் கண்ணீருடன் கடலுக்கும் ஒரு சலாம் போட்டார்.

'இன்று இல்லா விட்டாலும் நிச்சயம் ஒருநாள் நானும் இதே போன்ற ஒரு கப்பலில் போகத்தான் போகிறேன்! அழகிய கடலே, எனக்காக நீ காத்திருப்பாயா?'

கடலுக்கு மட்டும் வாய் இருந்திருந்தால் நிச்சயம் அது சத்தம் போட்டுச் சொல்லியிருக்கும். 'மெகல்லன், நிச்சயம் உனக்காக நான் காத்திருப்பேன். கவலைப்படாதே!'

*

மெகல்லனின் கப்பல் கனவு 1505-ல் ஒரு வழியாக நிறைவேறியபோது அவர் எந்த அளவுக்கு மகிழ்ந்திருப்பார் என்பதை நாம் கற்பனை செய்துதான் பார்த்துக்கொள்ளவேண்டும். முதல் பயணமே இந்தியாவுக்குத்தான். நல்ல வெயிலில் போர்ச்சுகலில் இருந்து கிளம்பி அட்லாண்டிக் பெருங்கடலைக் கடந்து, இந்தியப் பெருங்கடலை அடைந்து, இந்தியாவுக்கு வந்துசேர்ந்தது மெகல்லனின் கப்பல்.

இந்தியாவில் கால் பதிக்கும்போதே மெகல்லன் ஒரு புதிய மனிதராக மாறியிருந்தார். இப்போது அவர் ஓர் அரண்மனை ஊழியர் அல்ல. கப்பலைத் தவிர வேறு எதற்கும் சலாம் போட வேண்டியதில்லை. கடல் தவிர வேறு எதற்கும் கட்டுப்பட வேண்டியதில்லை. இனி வானமே எல்லை.

இப்படியெல்லாம் கனவு கண்டுகொண்டேதான் அவர் இந்தியாவில் நுழைந்தார். ஆனால் வந்து இறங்கும்போதே சிலர் கத்தியைத் தூக்கிக்கொண்டு ஓடிவந்தார்கள். திகைத்து நின்ற மெகல்லன் விரைவில் நிலைமையைப் புரிந்துகொண்டார்.

தாக்க வருபவர்கள் அரேபியா, வெனிஸ் ஆகிய நாடுகளைச் சேர்ந்த போட்டியாளர்கள். இந்தியா எனக்குத்தான், இல்லை எனக்குத்தான் என்று கத்திக்கொண்டே கத்தியைத் தூக்கிக்கொண்டு அவர்கள் மெகல்லன் மீது பாய்ந்தார்கள். எப்படியோ முட்டி, மோதி சண்டைபோட்டு தப்பித்துவிட்டார். கடல் பயணம் என்றால் வெறும் உல்லாசம் மட்டுமல்ல, அது ஆபத்தானதும்கூட என்பது முதல் பயணத்திலேயே மெகல்லனுக்குப் புரிந்துவிட்டது.

அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு ஆசை தீர இந்தியப் பெருங்கடலை ஒட்டிய பிரதேசங்களில் விருப்பம்போல் சுற்றி வந்தார் மெகல்லன்.

கண் காணும் திசையெல்லாம் ஒரு பறவையைப்போல் பறந்தார். ஸ்பைஸ் தீவுகளுக்குச் செல்லவேண்டும் என்று உள்ளம் துடித்தது. ஆனால் முடியவில்லை.

அதனாலென்ன அடுத்தடுத்து பல வாய்ப்புகள் அவருக்கு வந்தன. எதையும் அவர் விட்டுவைக்கவில்லை. ஆண்டுக்கணக்கில் சுற்றிச் சுற்றி வந்ததால் இப்போது அவருக்குக் கடல் மட்டுமல்ல, உலகம் பற்றியும் அதன் புவியியல் அமைப்பு பற்றியும் நன்றாகத் தெரிந்திருந்தது. தேவைப்படும்போது ஆபத்துகளைச் சந்திக்கவும் தேவைப்படும்போது ஆபத்துகளை உருவாக்கவும் அவருக்கு இப்போது தெரிந்திருந்தது.

இந்தத் துணிச்சலில் மெகல்லன் ஒரு நாள் கனவு காண ஆரம்பித்தார். எல்லோரும் செல்லும் வழியில் இல்லாமல் புதிய வழியில், புதிய முறையைக் கையாண்டு ஸ்பைஸ் தீவுகளைச் சென்றடைந்தால் நன்றாக இருக்குமே! பொதுவாகத் தென் கிழக்கு ஆசியாவுக்கு எல்லோரும் எப்படிப் போகிறார்கள்? கிழக்கு நோக்கி கப்பலில் பயணம் செய்வார்கள். அதுதான் எல்லோருக்கும் தெரிந்த ஒரே வழி. நன்கு பழக்கப்பட்ட பாதை என்பதால் அதுவே பாதுகாப்பானதும்கூட.

மெகல்லன் யோசித்தார். எல்லோரும் கிழக்கில் செல்கிறார்கள், எனவே நானும் கிழக்கில் செல்வேன். எல்லாரும் பாதுகாப்பாகப் பயணம் செய்கிறார்கள், எனவே நானும் பாதுகாப்பாகத்தான் பயணம் செய்வேன் என்று சொன்னால் எனக்கும் மற்றவர்களுக்கும் என்ன வித்தியாசம்? எல்லோரையும்போல் நானும் இருந்தால் எல்லோருக்கும் கிடைத்தது தானே எனக்கும் கிடைக்கும்? மற்றவர்களைக் காட்டிலும் வித்தியாசமாக இருக்கவேண்டுமானால், யாரும் யோசித்துப் பார்க்காத ஒரு விஷயத்தை நான் யோசிக்கவேண்டும் அல்லவா? அந்த ஒரு விஷயம் என்ன?

திடீரென்று மின்னல்போல் அந்த யோசனை பளிச்சிட்டது. எல்லோரும் கிழக்கே போகும்போது நான் ஏன் மேற்கில் போகக் கூடாது? இந்தத் திட்டத்தை அவர் தன் நண்பர்களிடம் சொன்னபோது அவர்கள் விழுந்து விழுந்து சிரித்தார்கள். ‘வித்தியாசமாகச் சிந்திப்பது முக்கியம்தான். அதற்காக இப்படியா? வலது பக்கம் போனால்தான் ஆசியா வரும் என்பதால்தான் எல்லோரும் வலது பக்கம் போகிறார்கள். இல்லை, நான் வித்தியாசமாக இடது பக்கம்தான் போவேன் என்று நீ அடம் பிடித்தால் தொலைந்துதான் போவாய். இவ்வளவு ஆண்டுகள் கப்பலில் சென்று நீ இதைக்கூட கற்றுக்கொள்ளவில்லையா, மெகல்லன்?’

மெகல்லன் சிரித்தார். ‘உங்களுக்குப் புவியியல் தெரியாததால்தான் இப்படிப் பேசுகிறீர்கள். வலது பக்கத்தில் உள்ள ஓரிடத்துக்கு இடது பக்கத்தில் இருந்தும் போகலாம். இதுதான் புதிய விதி.’

நண்பர்களுக்குப் புரியவில்லை. ஏனென்றால் புவியியல் என்னும் துறை கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்துகொண்டிருந்த காலகட்டம் அது. ஆசியா என்பது எவ்வளவு பெரியது? அதை எந்தெந்த வழியில் எல்லாம் சென்று அடையமுடியும்? ஒரு கடல் எங்கே தொடங்குகிறது, எங்கே முடிவடைகிறது? எதுவும் தெரியாது. பூமி பார்ப்பதற்குத் தட்டையாக இருப்பதால் பூமி தட்டை என்று முடிவு செய்தார்கள். நீள நீளமாக நடந்துகொண்டே இருந்தால் அல்லது கப்பலில் சென்றுகொண்டே இருந்தால் பூமி முடிவடையும் இடம் வந்துவிடும் என்று நம்பினார்கள்.

அப்படியெல்லாம் ஒருபோதும் ஆகாது, பூமி தட்டையல்ல உருண்டை என்று சிலர் மறுத்தபோது விழுந்து விழுந்து சிரித்தார்கள். பூமி உருண்டை என்றால் நாம் இந்நேரம் வழுக்கி விழுந்திருக்கவேண்டுமே, ஏன் அப்படி நடக்கவில்லை என்று கேள்வி கேட்டார்கள். ஆனால் இந்தக் கிண்டலைப் பொருட்படுத்தாமல் பலர் பூமி நிச்சயம் உருண்டைதான் என்று நம்பிவந்தார்கள்.

அப்படி நம்பியவர்களில் மெகல்லனும் ஒருவர். அதனால்தான் அவர் துணிச்சலுடன் அடித்துச் சொன்னார். ‘ஐரோப்பியப் பயணிகள் அனைவரும் கிழக்கில் சென்று ஆசியாவை அடைகிறார்கள். அதே ஆசியாவை நான் மேற்கில் சென்று தொடப் போகிறேன்.’

சொன்னதோடு நிறுத்தாமல் கிளம்பிவிட்டார். நம்பிக்கை, துணிச்சல், திறன் எல்லாமே மெகல்லனிடம் இருந்தது. இல்லாதது ஒன்றுதான், பணம். அதனாலென்ன இந்த வழியைக் கண்டுபிடித்தால் அதனால் பலனடையப் போவது என்னுடைய போர்ச்சுகல் நாடும் அதன் மன்னரும்தானே என்னும் நம்பிக்கையுடன் மன்னரைச் சென்று பார்த்தார் மெகல்லன். தன்னுடைய வித்தியாசமான திட்டத்தை ஆர்வத்துடன் விவரித்தார். மெகல்லனை ஒருமுறை ஏற, இறங்க பார்த்த மன்னர் சரி, அப்புறம் பார்க்கலாம் என்று எழுந்து போய்விட்டார்.

மெகல்லன் இதை எதிர்பார்க்கவில்லை. என்னைப் புறக்கணித்த இந்த மன்னரும் வேண்டாம், அந்த மன்னர் ஆளும் போர்ச்சுகலும் வேண்டாம் என்று கோபத்துடன் வெளியேறி பக்கத்து ஸ்பெயின் நாட்டுக்கு சென்றார். நல்லவேளையாக ஸ்பெயின் மன்னர் மெகல்லனை ஆதரிக்க முன்வந்தார். முன்பொருமுறை இதே போன்ற ஒரு வித்தியாசமான திட்டத்தோடு ஸ்பெயினின் மன்னர் ஃபெர்டினாண்டை கொலம்பஸ் அணுகியபோது அவரும்

இப்படித்தான் உடனடியாக கொலம்பஸை ஆதரித்தார். தற்போது மெகல்லனுக்கு ஆதரவு தந்த மன்னர் ஃபெர்டினாண்டின் பேரன். இது தெரிந்துதான் மெகல்லன் தைரியமாக போர்ச்சுகலைவிட்டு வெளியேறினார் போலும்.

10 ஆகஸ்ட் 1519 அன்று மெகல்லனின் உலகைச் சுற்றும் பயணம் ஆரம்பமானது. டிரினிடாட் என்னும் கப்பலை அவர் செலுத்தினார். உடன் வேறு நான்கு கப்பல்கள் மிதந்துவந்தன. அவற்றில் 200க்கும் அதிகமான பணியாளர்கள் இருந்தார்கள். இரண்டு ஆண்டுகளுக்குத் தாக்குப்பிடிக்கும்படியான உணவு கொண்டுசெல்லப்பட்டது. ஏராளமான ஆயுதங்களும் ஏற்றப்பட்டன.

செப்டெம்பர் மாதம் ஸ்பெயினை அடைந்த மெகல்லன் அட்லாண்டிக் பெருங்கடலைக் கடந்து முன்னேறினார். தென் அமெரிக்காவை அடைந்த பிறகு மேற்கொண்டு நகர்வதற்கு தோதான வழியை ஆராயத் தொடங்கினார். இதற்கிடையில் தங்கியிருந்த இடத்தில் இருந்து எதிர்ப்புகள் வரத் தொடங்கின. இது போதாதென்று, மெகல்லனின் கப்பலில் இருந்த சிலரே கூட கலகம் செய்ய ஆரம்பித்தார்கள். மெகல்லன் எல்லா எதிர்ப்புகளையும் மிகக் கடுமையான முறையில் அடக்கி ஒடுக்கினார்.

சற்றே சுதாரித்த பிறகு, நீ போய் வழி இருக்கிறதா என்று பார்த்துச் சொல் என்று சொல்லி தன்னுடன் வந்த சாண்டியாகோ என்னும் கப்பலை அனுப்பிவைத்தார். அந்தக் கப்பல் வரவேயில்லை. கடுமையான சூறாவளிப் புயலில் சிக்கி அது சின்னாபின்னமானது தெரியவந்தது. சரி பரவாயில்லை, வாருங்கள் நாமே வழி கண்டுபிடிப்போம் என்றார் மெகல்லன். ஆனால், முந்தைய கப்பலைப்போல் நம்முடையதும் மூழ்கிவிட்டால் என்ன செய்வது என்று அவர்கள் பயந்தார்கள். இந்த மெகல்லனை நம்பிப் பலனில்லை, நாம் ஊர் திரும்பிவிடலாம் என்று அவர்களில் பலர் முடிவெடுத்தார்கள்.

21 அக்டோபர் 1520 அன்று மெகல்லன் துணிந்து ஒரு புதிய பாதையைத் தேர்ந்தெடுத்து கப்பலைச் செலுத்தத் தொடங்கினார். (இந்தப் பகுதி இன்று மெகல்லன் ஜலசந்தி என்று அழைக்கப்படுகிறது). பெருங்கடல் ஒன்று குறிக்கிட்டது. முந்தைய கடல் பிரதேசங்களைப்போல் சூறாவளி, புயல் என்றில்லாமல் அமைதியாக இருந்த அந்தக் கடலுக்கு மார் பசிஃபோ என்று பெயரிட்டார். இன்று அது பசிபிக் கடல் (பசிபிக் என்றால் அமைதி) என்று அழைக்கப்படுகிறது.

அடுத்து பிலிப்பைன்ஸ் தீவுக்குச் சென்றார் மெகல்லன். தென் அமெரிக்காவைத் தாண்டி யாருமே வந்திராத நிலையில்

பிலிப்பைன்ஸில் காலடி எடுத்து வைத்த முதல் ஐரோப்பியர் மெகல்லன்தான். இனி ஸ்பைஸ் தீவுகள் கைக்கு எட்டும் தூரம்தான்! உற்சாகமானார் மெகல்லன்.

அடுத்து செர்பூ என்னும் தீவை 27 ஏப்ரல் 1521 அன்று அடைந்தார் மெகல்லன். அங்கிருந்த பழங்குடிகளிடம் இருந்து எதிர்ப்பு கிளம்பியபோதும்கூட மெகல்லன் அலட்டிக்கொள்ளவில்லை. என்னிடம் உள்ள நவீன ஆயுதங்களுக்கு முன்னால் வில்லும் அம்பும் ஒரு சிறு புல்போல என்று உருமியபடி தாக்குதலை ஆரம்பித்தார்.

அப்போது விஷ்க் என்று காற்றைக் கிழித்துக்கொண்டு ஓர் அம்பு பாய்ந்துவந்து மெகல்லனைத் தாக்கியது. அதில் நஞ்சு தடவியிருந்தது. ஆவென்று கீழே விழுந்த மெகல்லன் அதற்குப் பிறகு எழுந்திருக்கவே இல்லை.

- மெகல்லன் பிறந்த ஆண்டு 1480. போர்ச்சுகலில் குறிப்பாக எங்கே பிறந்தார்? எந்த மாதம்? எந்தத் தேதி? எதுவும் இதுவரை தெரியவில்லை.
- ஸ்பைஸ் தீவுகளுக்குப் போகவேண்டும் என்னும் கனவு மெகல்லனுக்குத் தோன்றியபோது அவர் வயது 18.
- கிராம்புக்கு அற்புதமான ஆற்றல் இருக்கிறது என்றும் அது நோய்களைக் குணப்படுத்தும் என்றும் ஐரோப்பியர்கள் நம்பினார்கள். கிராம்பு சாறு குடித்தால் கண் பார்வை பிரகாசமாகும், பொடி செய்து சாப்பிட்டால் காய்ச்சல் ஓடி விடும் என்று தொடங்கி பல விசித்திரமான நம்பிக்கைகளை அவர்கள் வளர்த்து வைத்திருந்தார்கள்.
- கிட்டத்தட்ட 20 ஆண்டுகளைக் கடலில் கழித்திருக்கிறார் மெகல்லன். இது அவர் வாழ்நாளில் பாதி ஆண்டுகள்.
- உலகம் உருண்டையானது என்னும் நம்பிக்கையுடன் பயணத்தைத் தொடங்கினார் மெகல்லன். அந்த உண்மையை நேரடியாகத் தரிசிக்கும் வாய்ப்பு அவருக்குக் கிடைக்கவில்லை.
- ஸ்பெயின், கிரேக்கம், சிசிலி, இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, வடக்கு ஆப்பிரிக்கா என்று பல நாடுகளைச் சேர்ந்த பணியாளர்கள் மெகல்லனின் கப்பலில் இடம்பெற்றிருந்தனர்.
- கடல் பயணத்தைப் போலவே கிறிஸ்தவ மதத்தைப் பரப்புவதிலும் மெகல்லன் ஆர்வம் காட்டினார். தான் சந்தித்த பலரை அவர் மதமாற்றம் செய்தார்.
- 8 அடி உயரம் கொண்ட அரக்கர்களை அர்ஜெண்டினா அருகில் கண்டதாக மெகல்லனின் ஆள்கள் பின்னர் விவரித்தனர்.

அவர்களில் ஓர் அரக்கனை மெகல்லன் மயக்கி தன் கப்பலுக்கு வரவழைத்து, மதம் மாற்றி, பால் என்று பெயரும் சூட்டினாராம்! இவர்கள் உயரமான பழங்குடிகளாக இருப்பார்கள் என்று இன்றைய வரலாற்று ஆசிரியர்கள் கருதுகிறார்கள்.

- 5 கப்பல்களில் விக்டோரியா மட்டும்தான் ஸ்பெயினை வந்தடைந்தது. முதலில் உலகைச் சுற்றிவந்த கப்பல் என்னும் பெருமையையும் அடைந்தது.
- இந்த உலகம் நாம் நினைத்திருந்ததைவிடவும் பெரியது. அதில் நாம் அறியாத பல விசித்திரமான பிரதேசங்கள் உள்ளன. மெகல்லனின் பயணத்தின் மூலம் ஐரோப்பா தெரிந்துகொண்ட முக்கியமான உண்மை இதுதான்.

## 9. ஜேம்ஸ் குக்

## கண்டுபிடிக்காமல் புகழ்பெற்றவர்

ஒருமுறை ஜேம்ஸ் குக்கிடம் கேட்டார்கள். ‘இதுவரை யாரும் போகாத இடத்துக்குப் போவதுதான் உங்கள் கனவா?’ ஜேம்ஸ் குக் அளித்த பதில் இது. ‘அவ்வளவு பெரிய ஆசையெல்லாம் எனக்கு இல்லை. மனிதர்களால் நினைத்துக்கூட பார்க்கமுடியாத இடத்துக்குப் போகவேண்டும் என்பதுதான் என் எளிமையான கனவு.’ விரைவில் அப்படி ஓர் வாய்ப்பு அவரைத் தேடி வந்தது. டெர்ரா ஆஸ்டிராலிஸ் போய் வரவேண்டும், முடியுமா என்று கேட்டார்கள். ஓ, நான் தயார் என்று கிளம்பிவிட்டார் ஜேம்ஸ் குக்.

அதென்ன டெர்ரா ஆஸ்டிராலிஸ்? 15-ம் நூற்றாண்டு முதல் 18-ம் நூற்றாண்டுவரை தயாரிக்கப்பட்ட பல வரைபடங்களில் இந்தப் பெயரை நீங்கள் பார்க்கலாம். ஆசியா, ஐரோப்பா, ஆப்பிரிக்காபோல் அது ஒரு பெரிய கண்டம் என்று குறிப்பிட்டு தெற்கில் குறித்து வைத்திருப்பார்கள். அரிஸ்டாட்டில் தொடங்கி பலர் இந்தக் கண்டம் பற்றி எழுதியிருக்கிறார்கள். இது பல அற்புதமான உயிரினங்களைக் கொண்ட ஒரு பெரிய நிலப்பிரதேசம் என்றும் நீண்ட பனிப் பிரதேசம் என்றும் அவர்கள் ஆச்சரியத்துடன் சொல்வார்கள்.

சரி, குறிப்பாக அது எங்கே இருக்கிறது? இங்கேதான் சிக்கலே. எல்லா மாலுமிகளுக்கும் அந்த இடத்தைப் பற்றித் தெரியும் என்றாலும் யாரும் அங்கே போனதில்லை. சரி வழியாவது சொல்லுங்கள் நான் போகிறேன் என்று கேட்டால், ஒவ்வொருவரும் ஒவ்வொரு தினுசாகப் பதிலளிப்பார்கள். ரொம்ப தூரம் போகவேண்டும். அது இங்கெல்லாம் இல்லை. இப்போது போவது ஆபத்து. இருக்கு, ஆனால் எங்கே என்று தெரியாது. இப்படி வாய்க்கு வந்ததை எல்லாம் சொல்வார்களே தவிர, தெளிவாகத் திசை சொல்ல மாட்டார்கள்.

இருந்தாலும் ஜேம்ஸ் குக் கிளம்பிவிட்டார். ஏற்கெனவே தெற்கில் அவர் நியூசிலாந்து சென்றிருக்கிறார். ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கரை முழுக்கக் கப்பலைச் செலுத்தி ஒரு சுற்று சுற்றிவந்திருக்கிறார். அதுவரை எந்த ஓர் ஐரோப்பியரும் இதைச் செய்ததில்லை. அதே தெற்கில் இன்னும் கொஞ்சம் போனால் ஒளிந்துகொண்டிருக்கும்

அந்த டெர்ரா ஆஸ்டிராலிஸ் என்னும் மாயக் கண்டத்தைக் கண்டுபிடித்துவிட முடியாதா என்ன?

1772-ம் ஆண்டு குக்கின் இரண்டாவது பயணம் ஆரம்பமானது. இந்த முறை ரிசல்யூஷன், அட்வென்ச்சர் என்னும் கப்பல்கள் தயாராக இருந்தன. கப்பலில் ஏறியதுமே குக் வழக்கம்போல் பணியாளர்கள் அனைவரையும் அழைத்தார். மீண்டும் அதே பழைய பல்லவி. தினமும் குளி. துணிகளைத் துவைத்துக் காயப்போடு. குப்பை போடாதே. எச்சில் துப்பாதே. சாப்பிடுவதற்கு முன்பும் பின்பும் கைகளைக் கழுவிக்கொள். இப்படி ஒரு முழம் நீளத்துக்கு அறிவுரை மழை!

அப்போதெல்லாம் ஸ்கர்வி எனப்படும் ஊட்டச்சத்துக் குறைபாடு நோய் வேகமாகப் பரவிக்கொண்டிருந்தது. குறிப்பாக மாலுமிகள், கப்பல் பணியாளர்கள், பயணிகள், போர் வீரர்கள் போன்றவர்களை இந்த நோய் அதிகம் தாக்கியது. அவர்களில் பலர் கப்பல் பயணத்தின்போதே உயிரிழந்தனர். அதனால் ஜேம்ஸ் குக் மிகவும் கவனத்துடன் இருந்தார். தனக்கும் தன்னுடன் வருபவர்களுக்கும் ஸ்கர்வி வந்துவிடக்கூடாது என்பதற்காகக் கிட்டத்தட்ட ஓர் ஆராய்ச்சியாளராகவே மாறி பல பரிசோதனைகளை மேற்கொண்டார்.



ஜேம்ஸ் குக்

பலவிதமான புட்டிகளில் வகை வகையான சாறுகளைப் பிழிந்து, கலக்கி அனைவருக்கும் கொடுத்தார். என்ன கொடுத்தாலும் ஏன், ஏது என்று கேள்வி கேட்காமல் வாங்கி டபக்கென்று குடித்துவிடவேண்டும் என்பது கண்டிப்பான கட்டளை. திடீரென்று ஒரு மதிய வேளை கொழகொழப்பாக, கசப்பாக ஏதாவது ஒன்றைக் கொண்டு வந்து குடிக்கச் சொல்வார். மாலையில் புளிப்பாக ஏதாவதொரு பானம் வரும். மறுநாள் இரண்டையும் கலக்கிக் கொண்டுவந்து தருவார்.

ஊற வைத்த கேரட், மால்ட், ஆரஞ்சு, எலுமிச்சைச் சாறு ஆகியவை குக் அதிகம் பயன்படுத்திய மருந்துகள். இயற்கை மருத்துவத்தில் அவருக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்ததால் தன்னுடன் சில மருத்துவர்களையும் அவர் அழைத்துவந்திருந்தார். செடி, கொடி, இலை, தழை என்று அவர்கள் பலவற்றைச் சேகரித்து அவற்றின்

மருத்துவக் குணங்களைக் கண்டுபிடிக்கவேண்டும் என்று சொல்லியிருந்தார். இன்னொரு நாள் முட்டைகோஸ் பரிசோதனை தொடங்கியது. கோஸை எடுத்து துண்டு துண்டாக வெட்டி உப்பில் போட்டு நன்றாகப் புளிக்கும்வரை காத்திருந்தார். எடுத்து அனைவருக்கும் கொடுத்தார்.



தாகித்தியில் HMS ரிசல்யூஷன்

இந்தப் பரிசோதனை பெரும் வெற்றி பெற்றது. ஜேம்ஸ் குக்கின் பயணங்களைப் போலவே அவருடைய மருத்துவமும் பெரும் புகழ்பெற்றது. ஜேம்ஸ் குக் சென்ற கப்பல்கள் தவிர மிச்ச கப்பல்களில் சென்றவர்களில் பலரை ஸ்கவர்வி நோய் தாக்கியிருந்தது. எல்லோரும் ஜேம்ஸ் குக்கிடம்தான் ஓடிவந்தார்கள். ஐயா, நீங்கள் அப்படி என்ன மருந்து கொடுத்தீர்கள், சொன்னால் நாங்களும் பலன் அடைவோமே! ஜேம்ஸ் குக் தன்னுடைய பரிசோதனைகளை மற்றவர்களிடமும் பகிர்ந்துகொண்டார்.

அதற்குப் பிறகு புறப்பட்ட கப்பல்கள் அனைத்திலும் ஜேம்ஸ் குக்கின் வழிமுறையே கையாளப்பட்டது. கோஸ், ஆரஞ்சு, எலுமிச்சை சாறு ஆகியவை அனைவருக்கும் பரிமாறப்பட்டன. குறிப்பாக எலுமிச்சை

சாறு வாந்தி, தலைச்சுற்றல், சோர்வு உள்பட பலவித உபாதைகளுக்கு உதவியாக இருந்தது கண்டுபிடிக்கப்பட்டது. ஒரு புள்ளிவிவரத்தின்படி 1795 தொடங்கி 1815 வரை ராயல் நேவி தனது கப்பல்களுக்காக எவ்வளவு எலுமிச்சை சாறு வாங்கியது தெரியுமா? 16 லட்சம் கேலன். (ஒரு கேலன் 3.79 லிட்டர்).

அதற்குப் பிறகு மேற்கொள்ளப்பட்ட எல்லாப் பயணங்களிலும் ஜேம்ஸ் குக்கின் தாக்கம் இருந்தது. வரை

படம் இருக்கிறதா என்பதைவிட எலுமிச்சை சாறு இருக்கிறதா என்பதை உறுதிபடுத்திக்கொண்ட பிறகுதான் கப்பலையே எடுத்தார்கள். எல்லா மாலுமிகளும் தங்கள் பணியாளர்களுக்கு ஜேம்ஸ் குக் வழங்கிய அதே முழ நீள அறிவுரைகளை வழங்கினார்கள். சுத்தமாகவும் ஆரோக்கியமாகவும் இருந்து நல்ல உணவைச் சாப்பிட்டால் ஸ்கர்வி மட்டுமல்ல, எந்தத் தொற்றுநோயும் வராது என்று மருத்துவர்களும் ஜேம்ஸ் குக் வழிமுறையை மற்றவர்களுக்குச் சிபாரிசு செய்தனர்.

சரி, டெர்ரா ஆஸ்டிராலிஸ் என்ன ஆனது? நியூ சிலாந்தில் டேரா போட்டு தங்கிய ஜேம்ஸ் குக், அங்கிருந்து எல்லாத் திசைகளிலும் சென்று பார்த்தார். எந்தக் கண்டத்தையும் காண முடியவில்லை. கடுமையான குளிர் வாட்டியது. பெரிய பெரிய ஐஸ் பாறைகள் தென்பட்டன. திடீரென்று சூறாவளி தாக்கியது. இரவு நேரங்களில் புயல் வீசியபோது பலர் நடுக்கத்துடன் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டிருந்தார்கள். சூரியனைப் பார்க்கும்போதுதான் உயிர் திரும்பிவரும்.

இப்படி 10,600 மைல்கள் தூரத்தை ஜேம்ஸ் குக் கடந்துசென்றார். டெர்ரா ஆஸ்டிராலிஸ் மட்டுமல்ல, எந்தவித நிலப்பரப்பும் இருப்பதாகத் தெரியவில்லை. மேலும் சில தினங்கள் செலவழித்துவிட்டு தன் நோட்டுப் புத்தகத்தில் எழுதினார். டெர்ரா ஆஸ்டிராலிஸ் என்பது ஒரு கற்பனை இடம்! இனி யாரும் அதைத் தேடிப் போகவேண்டாம்!

அவர் சொன்ன பிறகுதான் உலகம் ஏற்றுக்கொண்டது. ஆக, புதிய கண்டத்தைக் கண்டுபிடித்து புகழ்பெற்றவர்கள் மத்தியில் ஒரு கண்டம் இல்லவே இல்லை என்பதைக் கண்டுபிடித்துச் சொன்ன முதல் பயணியாக ஜேம்ஸ் குக் புகழ்பெற்றுள்ளார். அதற்காக அவர் எதையுமே கண்டுபிடிக்கவில்லை என்று நினைத்துவிடவேண்டாம். நியூ சிலாந்து, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளை முதல்முறையாக விரிவாக வரைபடத்தில் குறித்தவர் இவர்தான். பசிபிப் பெருங்கடல் பகுதியைப் பற்றியும் அவர் விரிவாக வரைபடத்தில் குறித்தார். ஜேம்ஸ் குக் போட்டுக்கொடுத்த பாதையில்தான் அதற்குப் பிறகு

வந்தவர்கள் அனைவரும் சென்று இந்த நாடுகளை அடைந்தனர்.

ஜேம்ஸ் குக்கின் மூன்றாவது பயணம் ஆச்சரியமும் அதிர்ச்சியும் கலந்தது. 1779-ம் ஆண்டு ஹவாய் தீவை வந்தடைந்த ஜேம்ஸ் குக் அங்கே சில வாரங்கள் தங்கியிருந்தார். பிறகு கேலாகெக்குவா விரிகுடா என்னும் ஒரு பகுதிக்குச் சென்றார். கப்பலைவிட்டு அவர் கீழே இறங்கியதும் அங்கிருந்த ஹவாய் மக்கள் கும்பல் கும்பலாக ஓடிவந்து அவரை வணங்க ஆரம்பித்துவிட்டனர். லோனோ, லோனோ, எங்கள் தெய்வமே வந்துவிட்டீர்களா என்று அவர்கள் ஆரவாரத்துடன் கத்த ஆரம்பித்துவிட்டார்கள்.

பிறகுதான் ஜேம்ஸ் குக்குக்கு தெரிந்தது. அது அவர்களுடைய பண்டிகை தினமாம். லோனோ என்னும் கடவுளை அவர்கள் வழிபட்டுக்கொண்டிருந்தார்களாம். அந்த நேரம் பார்த்து விசித்திரமான ஒரு வாகனத்தில் வித்தியாசமான உடையணிந்து வந்த ஜேம்ஸ் குக்கை அவர்கள் லோனோ என்று நினைத்துவிட்டார்கள்.

ஆனால் சில தினங்களில் நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. 14 பிப்ரவரி 1779 அன்று ஏதோ கருத்து வேறுபாட்டால் ஜேம்ஸ் குக் குழுவினருக்கும் கிராம மக்களுக்கும் இடையில் வாய் சண்டை தொடங்கி அது அடிதடி வரை போய்விட்டது. என்ன, ஏது என்று புரிந்துகொள்வதற்குள் சிலர் பின்னால் இருந்தபடி ஜேம்ஸ் குக்கின் தலையைத் தாக்கினார்கள். கீழே விழுந்த அவரைச் சிலர் கத்தியால் குத்த, ஜேம்ஸ் குக் அதே இடத்தில் மரணமடைந்தார்.

அவசரப்பட்டு இப்படிச் சிலர் நடந்துகொண்டாலும் ஹவாய் மக்கள் ஜேம்ஸ் குக்கை நினைத்து நினைத்து வருந்தினார்கள். அவர் லோனோவாக இல்லாமல் இருக்கலாம், இருந்தாலும் அவர் எங்களுக்குக் கடவுளைப் போன்றவர்தான் என்று அஞ்சலி செலுத்தினார்கள்.

இன்றும் ஜேம்ஸ் குக்கின் அடையாளம் இதுதான். அவர் உலகின் தலைசிறந்த பயணிகளில் ஒருவர் மட்டுமல்ல. ஒரு நல்ல மனிதரும்கூட.

- பல சமயம், பெரிய கப்பலில் இருந்து ஒரு சின்ன படகுக்கு மாறி சுற்றி வருவது ஜேம்ஸ் குக்கின் வழக்கம். மன அமைதிக்காகவும் புதிய இடங்களைத் தனியாகக் கண்டு ரசிக்கவும் இவ்வாறு அவர் செய்வது வழக்கம்.
- தாகித்தி என்னும் தீவில் இருந்த பழங்குடிகளின் பழக்கவழக்கங்களை ஆர்வத்துடன் கவனித்தார் ஜேம்ஸ் குக். ஒரு மனிதனைப் பலிகொடுக்கும் சடங்கு நடைபெறுவதை முதல் முறையாக அங்கே பார்த்தார்.

- இரண்டாவது பயணத்துக்குப் பிறகு வீடு திரும்பியபோது இங்கிலாந்தில் ராயல் சொஸைட்டி அவருக்கு விருதுகளையும் பரிசுகளையும் வழங்கி மரியாதை செலுத்தியது. அவருடைய உருவப்படமும் வரையப்பட்டது. இப்போதும் கிரீன்விச்சில் அந்த ஓவியம் இருக்கிறது.
- வழக்கமாக மாலுமிகள் பாதிரிகளையும் தங்களுடன் கப்பலில் அழைத்துச் செல்வது வழக்கம். ஜேம்ஸ் குக் அவர்களுக்குப் பதிலாக அறிவியல் ஆராய்ச்சியாளர்களைத்தான் அழைத்துச் சென்றார். தன் மத நம்பிக்கைகளை அவர் தனக்குள் மட்டுமே வைத்துக்கொண்டார்.
- மற்றவர்களைப் போல் தன் பணியாளர்களை அவர் கடிந்துகொண்டதில்லை. திட்டியதில்லை. கடுமையாக வேலை வாங்கியதில்லை. தன் அதிகாரத்தைப் பயன்படுத்தி யாரையும் அச்சுறுத்தியதில்லை. பல நேரம் பழங்குடிகளையும் கிராம மக்களையும் தன் கப்பலில் அவர் ஏற்றிக்கொண்டார்.
- ஜேம்ஸ் குக் மூன்றாவது பயணம் மேற்கொண்டபோது பிரிட்டனின் ஆதிக்கத்தை எதிர்த்து அமெரிக்கப் புரட்சி நடைபெற்றுக்கொண்டிருந்தது. அப்போது பெஞ்சமின் பிராங்ளின் ஓர் உத்தரவைப் பிறப்பித்தார். ‘பிரிட்டன் நமக்கு எதிரி என்றாலும் ஜேம்ஸ் குக் நம் நண்பர். அவரையும் அவர் பயணத்தையும் யாரும் தடுக்கக்கூடாது! ’

## 10. ஜான் கபோட்

### கண்டுபிடித்ததும் காணாமல் போனதும்

கிறிஸ்டோபர் கொலம்பஸ், ஜான் கபோட் இருவருக்கும் பல ஒற்றுமைகள் இருக்கின்றன. இருவரும் இத்தாலியைச் சேர்ந்தவர்கள். இருவருக்கும் கப்பல் பயணம் பிடிக்கும். இருவருக்கும் ஆசியாவை அடைவதுதான் லட்சியம். ஐரோப்பாவில் இருந்து ஆசியா செல்வதற்கு ஒரு புதிய வழித்தடத்தைக் கண்டுபிடிக்கவேண்டும் என்று இருவருமே வாழ்நாள் முழுவதும் விரும்பினார்கள். இருவருமே தங்கள் கனவைத் தேடி சுற்றி அலைந்தவர்கள். இருவருமே எதிர்பாராத முடிவுகளை அடைந்தார்கள். கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்ததாகத் தவறான நினைத்துக்கொண்டார். சரி, கபோட் என்ன செய்தார்?

அதைப் பார்ப்பதற்கு முன்னால் ஒரு சிறிய அறிமுகம். ஜான் கபோட் ஒரு வணிகராகத் தன் வாழ்வைத் தொடங்கியவர். மெக்கா வரை சென்றிருக்கிறார். கடல், கப்பல் தெரியும். கப்பல் ஓட்டவும் வரைபடம் தயாரிக்கவும்கூடத் தெரியும். கொலம்பஸைப் போல் மேற்கே சென்று ஒரு வலம் வந்து ஆசியாவைத் தொட்டுவிடலாம் என்று கபோட் கனவு கண்டார்.

1492-ம் ஆண்டு கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டடைந்தபோது ஜான் கபோட் எங்கே இருந்தார், என்ன செய்துகொண்டிருந்தார் என்று தெரியவில்லை. இன்னும் கனவுதான் கண்டுகொண்டிருந்தாரா அல்லது ஏதேனும் முயற்சிகள் மேற்கொண்டாரா என்பது பற்றிய குறிப்புகள் இல்லை. நிச்சயம், கப்பலில் எங்காவது சுற்றிக்கொண்டுதான் இருந்திருப்பார் என்று யூகிக்கலாம்.

1495 இறுதியில் கபோட் மீண்டும் வெளிச்சத்துக்குவருகிறார். அப்போது அவர் இங்கிலாந்தில் உள்ள பிரிஸ்டோல் என்னும் பகுதிக்கு வந்துசேர்ந்திருந்தார். அது ஒரு துறைமுக நகரம். கப்பல் பயணங்களை நேசிப்பவர்களுக்கும் புதிய வழிகளைக் கண்டறிய விரும்பும் ஆர்வலர்களுக்கும் பிரிஸ்டோல் ஒரு கலங்கரை விளக்கமாக இருந்தது. இங்கிருந்துதான் பல பயணிகள் புது வழி தேடி தங்கள் கப்பல் பயணத்தை ஆரம்பித்தார்கள். கபோடும் இங்கிருந்தே தனது

கனவுப் பயணத்தைத் தொடங்கினார்.

அதற்குக் காரணம் இங்கிலாந்தின் மன்னர் ஏழாம் ஹென்றி. கபோடுக்குக் கப்பலும் கை நிறைய பணமும் தேவைப்படும் ஆள்களையும் அளித்து வாழ்த்தி அனுப்பிவைத்தவர் இவர்தான். ஏழாம் ஹென்றி கபோடை அனுப்பி வைத்ததற்கும் காரணம் கொலம்பஸ்தான். கொலம்பஸ் தன்னுடைய சாகசப் பயணங்களைப் பற்றி ஆஹா ஓஹோ என்று பல இடங்களில் தானே சொல்லிவந்தார். இந்தப் பேச்சுகள் அங்கும் இங்கும் பரவி இங்கிலாந்தையும் வந்தடைந்தது.

யாரிந்த கொலம்பஸ், பல புதிய நாடுகளை இவர் கண்டுபிடித்திருக்கிறாராமே? இவருக்கு நிதியுதவி அளித்த ஸ்பெயின் இனி ஓஹோவென்று வளரப் போகிறதாமே? என்றெல்லாம் மக்கள் பேசிக்கொள்ளத் தொடங்கினார்கள். ஏழாம் ஹென்றி சும்மா இருப்பாரா? நாமும் கப்பல் கொடுப்போம். நாமும் ஒருவரை அனுப்பி வைப்போம். அவர் ஏதாவது கண்டுபிடிக்கிறாரா பார்ப்போம் என்று ஜான் கபோடைக் கப்பென்று பிடித்துக்கொண்டார்.




பாரம்பரிய வெனீஷியன் உடையில் ஜான் கபோட்

மே 1497-ல் பிரிஸ்டோலில் இருந்து கிளம்பினார் கபோட். சிறிய கப்பல்தான். மேத்யூ என்று பெயர். மொத்தம் 18 பணியாளர்கள் இருந்தார்கள். இதை வைத்துக்கொண்டு அவர் எங்கே சுற்றுகிறார் என்று பார்ப்போம் என்று மன்னர் கருதியிருக்கலாம். ஜூன் 24-ம் தேதி இந்தக் கப்பல் வட அமெரிக்காவைச் சென்றடைந்தது. இந்தக் குறிப்பு நமக்குக் கிடைக்கிறது. எப்படிப் போனார்கள், வழியில் என்னவெல்லாம் நடந்தது என்பதெல்லாம் தெரியவில்லை. வட அமெரிக்காவில் எங்கே இறங்கினார் என்பதும்கூடச் சரியாகத் தெரியவில்லை. ஒவ்வொருவரும் ஒவ்வோரிடத்தைக் குறிப்பிடுகிறார்கள்.

நான் சென்றபோது மக்கள் யாரும் அங்கில்லை. ஆனால் அது மக்கள் வாழக்கூடிய இடம்தான் என்பது பார்த்தவுடனே தெரிந்துவிட்டது என்கிறார் கபோட். உள்ளே சுற்றி வந்து பார்த்திருக்கிறார். யாரும்

இல்லை என்பதைத் தெரிந்ததும் அவருக்கு மகிழ்ச்சியும் திருப்தியும் ஏற்பட்டது. இது நான் கண்டுபிடித்த இடம் என்று பெருமையுடன் சொல்லிக்கொண்டதோடு அந்த நிலத்தை ஹென்றிக்குச் சொந்தமானதாகவும் மாற்றினார். இன்று அது கபோட் ஸ்ட்ரெயிட் என்னும் பெயரால் அழைக்கப்படுகிறது. இப்போதைய கிழக்கு கனடாவைச் சேர்ந்த பகுதி அது.

சந்தேகமில்லை, இது கபோடின் சாதனைதான். யாருமற்ற, இயற்கை வளம் கொண்ட ஒரு புதிய இடத்தை அவர் கண்டுபிடித்திருந்தார். அதுவும் முதல் பயணத்திலேயே, அதிகம் சிரமப்படாமல் அவர் இதைச் செய்துமுடித்திருந்தார். எவ்வளவோ கடல் பயணிகள் உயிரைக் கொடுத்து மாதக்கணக்கில் ஆண்டு கணக்கில் சுற்றி அலைந்து ஒன்றுமே கிடைக்காமல் திரும்பி வந்திருக்கிறார்கள். பலர், திரும்பிக்கூட வரவில்லை. அப்படியிருக்கும்போது போனோமா வந்தோமா என்று ஒரு புதிய பகுதியை வசப்படுத்திக்கொண்ட கபோட் அப்போது பல பாராட்டுகளை வென்றெடுத்தது நிஜம்.

ஆனால் கபோட் ஒரு தவறு செய்துவிட்டார். தான் கண்டுபிடித்தது ஒரு வட அமெரிக்க நிலப்பரப்பு என்பதை அவர் உணரவில்லை. இதுதான் ஆசியா என்று நினைத்துக்கொண்டார். ஆசியாவின் வடகிழக்கு கடற்கரைப் பகுதியைக் கண்டுபிடித்துவிட்டேன் என்று சத்தம் போட்டு அறிவித்தார். இங்கே மிளகும் ஏலக்காயும் இன்னபிற வாசனைப் பொருள்களும் கொத்துக் கொத்தாகக் கிடைக்கும் என்று மகிழ்ந்தார். நான் மட்டுமல்ல என்னை நம்பி வழியனுப்பி வைத்த மன்னருக்கும் அவருடைய நாட்டுக்கும் நற்பெயர் சம்பாதித்துக் கொடுத்துவிட்டேன் என்று கூத்தாடினார். அவர் சொன்னதை எல்லோரும் நம்பினார்கள். அடடா, கொலம்பஸுக்கு அடுத்தது நீதான் போ என்று மேலும் உற்சாகமூட்டினார்கள். அவரும் தன்னை இன்னொரு கொலம்பஸாகத்தான் நினைத்துக்கொண்டார். அவர் நினைத்தது சரிதான். தவறாக இடத்தைக் கண்டுபிடித்ததில் அவர் இன்னொரு கொலம்பஸேதான்.

1497 இறுதியில் அடுத்த பெரும் பயணத் திட்டத்துடன் ஏழாம் ஹென்றியைச் சென்று பார்த்தார் கபோட். சின்னக் கப்பலை வைத்துக்கொண்டே பெரிய இடத்தைக் கண்டுபிடித்த ஒரு புகழ்பெற்ற பயணியிடம் இன்னொரு பயணம் வேண்டாம் என்றா சொல்லமுடியும்? அளவு கடந்த உற்சாகத்துடன் வழியனுப்பினார் மன்னர். இந்த முறை அவர் கண்டுபிடிக்க விரும்பிய இடம் ஜப்பான். வடக்கு அட்லாண்டிக் பகுதி வழியாகச் சென்று ஜப்பானைச் சென்றடைவதே அவருடைய திட்டம்.

மே 1498ல் கபோடின் பயணம் ஆரம்பமானது. இந்த முறை சின்ன

கப்பல் அல்ல, பெரிய கப்பல். ஒன்றல்ல, ஐந்து கப்பல்கள். உடன் எவ்வளவு பேர் தெரியுமா? 200 ஆள்கள்! இனியும் கபோட் ஒரு சாதாரண பயணி கிடையாது அல்லவா?

கப்பல் பார்வையைவிட்டு மறைவதற்குள் மன்னர் கனவு காண ஆரம்பித்துவிட்டார். ஆசியாவின் ஒரு பகுதி கைக்கு வந்துவிட்டது. இப்போது ஜப்பானும் கிடைத்துவிட்டால் பிறகு என் நிலை ஆஹா ஓஹோவென்று வானம் வரை உயர்ந்துவிடுமே! பிரான்ஸ், போர்ச்சுகல் என்று இனி யாரும் பெருமை பேச முடியாதபடிக்கு இங்கிலாந்து கண்டுபிடிப்புகளின் நாடாக ஜொலிக்கும் அல்லவா? ஜான் கபோட் உண்மையிலேயே ஒரு மகத்தான பயணிதான்!

அப்படியே நம் பார்வையை கபோடை நோக்கித் திருப்புவோம். பிரிஸ்டோலில் இருந்து ஐந்து கப்பல்கள் ஆடி அசைந்து செல்லத் தொடங்கின. சரி, அதற்குப் பிறகு என்ன நடந்தது? சுத்தமாகத் தகவலே இல்லை. ஜூலை மாதம் ஏதோ ஒரு தினம், அந்த ஐந்து கப்பல்களில் ஏதோ ஒரு கப்பலின் ஏதோ ஒரு பகுதி அயர்லாந்து அருகில் கரை ஒதுங்கியதாகத் தகவல் வந்தது. வழியில் பெரும் சூறாவளியில் சிக்கிக்கொண்டிருக்கலாம் என்று சிலர் யூகிக்கிறார்கள். வேறு ஏதேனும் விபத்து நடந்திருக்கலாம் என்கிறார்கள் வேறு சிலர். விபத்து நடந்தால் ஒரே நேரத்தில் ஐந்து கப்பல்களுமா காணாமல் போய்விடும் என்று இன்னும் சிலர் மறுத்தார்கள்.

சரி, கபோட் என்ன ஆனார்? கப்பல்கள் காணாமல் போகும்போது அவர் மட்டும் எப்படிப் பிழைத்திருக்கமுடியும் என்றார்கள் சிலர். அவர் சாதாரண ஆள் இல்லை, நிச்சயம் எங்காவது கரை ஒதுங்கியிருப்பார் என்றார்கள் சிலர். நினைத்ததைப் போலவே அவர் ஜப்பான் போய்விட்டார் என்றும் சிலர் சொன்னார்கள். திட்டவட்டமாக வரலாற்று ஆசிரியர்கள் சொல்லும் பதில் ஒன்றுதான். கபோட் என்னவானார் என்று தெரியவில்லை!

- ஜான் கபோட் 1450-ம் ஆண்டு இத்தாலியில் பிறந்தார்.
- கபோடின் சாதனை அவருடைய முதல் பயணம்தான். கனடாவை பிரிட்டன் பின்னாள்களில் உரிமை கொண்டாடியதற்குக் காரணம் அவர்தான்.
- கப்பல்கள் புயலில் காணாமல் போனாலும் கபோட் வட அமெரிக்காவுக்குத் தப்பிச் சென்றுவிட்டார். ஆனால் அங்கிருந்து மீண்டும் இங்கிலாந்துக்கு அவரால் திரும்பமுடியவில்லை என்றொரு கருத்தும் நிலவுகிறது.
- வட அமெரிக்காவை ஆசியா என்று கபோட் நினைத்துக்கொண்டார் என்று பார்த்தோம். ஆசியாவில்

குறிப்பாக எந்தப் பகுதி என்று கேட்டபோது, சீனா என்று பதிலளித்தார் அவர்.

- கபோடுக்கு மூன்று மகன்கள் இருந்தனர். அவர்களில் ஒருவரான செபாஸ்டியன் கபோட் தன் தந்தையின் வழியைப் பின்பற்றி ஒரு கடல் பயணியாக மாறினார்.

# 11. சார்லஸ் டார்வின்
## இயற்கையின் ரகசியம்

தன் முன்னால் வந்து அமர்ந்த அந்த 22 வயது இளைஞனின் மூக்கை உற்றுப் பார்த்தார் கேப்டன் ஃபிட்ஸ்ராய். பிறகு கேள்விகள் கேட்க ஆரம்பித்தார்.

‘நீ யார்? என்ன படித்திருக்கிறாய்?’

‘என் பெயர் சார்லஸ் டார்வின். என் அப்பா ராபர்ட் டார்வின் ஒரு மருத்துவர். என் தாத்தா எராஸ்மஸ் ஒரு தாவரவியல் நிபுணர். நான்... நான்... எடின்பர்க் பல்கலைக்கழகத்தில் சிறிது காலம் மருத்துவம் படித்தேன்.’

‘அதென்ன சிறிது காலம்? படிப்பை முடித்தாயா இல்லையா?’

‘இல்லை. உண்மையில்... எனக்கு அதில் ஆர்வம் இல்லை. என்னால் தொடர்ந்து படிக்க முடியவில்லை. எனக்கு ரத்தம் என்றால் கொஞ்சம் பயம்.’

ஃபிட்ஸ்ராய்க்குச் சிரிப்புவந்தது. ‘ரத்தத்தைக் கண்டு பயப்படும் டாக்டரா நீ? சரி, சரி. அடுத்து என்ன செய்யப் போகிறாய்?’

‘நான் ஒரு பாதிரியாக வேண்டும் என்று அப்பா விரும்புகிறார். ஆனால் எனக்கு அதில் விருப்பமில்லை. எனக்கு இந்த உலகைப் பார்க்கவேண்டும். உலகில் உள்ள விலங்குகளையும் பூச்சிகளையும் பறவைகளையும் மீன்களையும் ஆராயவேண்டும். இயற்கையின் மீது மட்டும்தான் எனக்கு ஆர்வம் இருக்கிறது. நான் இயற்கையின் மாணவனாக இருந்துவிடவே விரும்புகிறேன். அதற்காகத்தான் உங்கள் கப்பலில் வர விரும்புகிறேன். உங்களுடன் வந்தால் பலவிதமான தீவுகளைப் பார்க்கலாம். வித்தியாசமான உயிரினங்களைக் காணலாம். நிறைய கற்றுக்கொள்ளலாம். பிறகு...’

ஃபிட்ஸ்ராய் அப்போதுதான் கவனித்தார். அந்த இளைஞரின் மூக்கு மட்டுமல்ல அவன் பேச்சும்கூட சரியில்லை. அடிக்கடி வார்த்தைகள் திக்குகின்றன. ஒவ்வொரு புதிய வரியைத் தொடங்கும்போதும் தடுமாற்றம் ஏற்படுகிறது. சில வார்த்தைகள் சரியாகவே வாயில்

இருந்து வரவில்லை. குறிப்பாக டபிள்யூ என்னும் எழுத்தைச் சரியாக உச்சரிக்க முடியவில்லை. கண்களில் ஆர்வமும் துடிப்பும் இருந்தாலும் உடல் அந்த அளவுக்கு வலுவாக இல்லை என்பதையும் கவனித்தார் ஃபிட்ஸ்ராய்.

சார்லஸ் டார்வின் நிறுத்தாமல் பேசிக்கொண்டே இருந்தார்.

‘வரலாறு, கிரேக்கம் எல்லாம் பள்ளியில் கற்றுக் கொடுத்தார்கள். எனக்கு ஆர்வம் இல்லை. மருத்துவப் படிப்பில்கூட பழசாகிப்போன பாடங்களை மட்டுமே நடத்தினார்கள். அதையெல்லாம் படித்தால் ஒரு பயனும் இருக்காது என்பதைப் புரிந்துகொண்டேன். அற்புதமான, விசித்திரமான பல உயிரினங்கள் உலகில் இருக்கின்றன. அவற்றைப் பற்றியெல்லாம் புத்தகங்களில் ஒன்றுமே இல்லை. அதனால் புத்தகங்களை மூடிவைத்துவிட்டு நேரடியாக உலகைப் படிக்கலாம் என்று முடிவெடுத்துவிட்டேன்.’

‘அதெல்லாம் சரிதான். ஆனால் உன்னை எதற்காக நான் பீகிள் பயணத்தில் அழைத்துச் செல்லவேண்டும்? உன் உடல் வலுவாக இல்லை. உன் பேச்சு சரியில்லை. படிப்பும் அரைகுறைதான்.’

டார்வினின் முகம் மாறியது. குரலில் பதற்றம் தொற்றிக்கொண்டது. ‘என் வாழ்க்கையில் இது ஒரு முக்கியமான பயணம். தயவு செய்து மறுத்துவிடாதீர்கள். இப்படி ஒரு பயணம் போகவேண்டும் என்று நீண்ட காலமாகவே நான் உழைத்து வருகிறேன். கடல் கடந்து தீவுகளுக்குச் செல்வதே என் கனவு. அதற்காகவே கஷ்டப்பட்டு ஸ்பானிஷ் மொழியும் கற்று வைத்திருக்கிறேன். என்னை நம்பி நீங்கள் அழைத்துச் செல்லலாம். உங்கள் எதிர்பார்ப்புகளை வீணாக்க மாட்டேன்.’

உண்மையில், டார்வினைப் பார்த்த அடுத்த விநாடியே கேப்டன் முடிவு செய்துவிட்டார். இவன் நமக்குச் சரிவரமாட்டான், நிராகரித்துவிட வேண்டியதுதான். ஆனால் இப்போது அவர் தன் முடிவை மாற்றிக்கொண்டிருந்தார். இவன் நிச்சயம் ஒரு தோல்வியாளன்தான். இவனால் எதையும் ஒழுங்காகச் செய்து முடிக்க முடியாது. இருந்தாலும் ஒரு பயணத்துக்காக கஷ்டப்பட்டு ஸ்பானியம் மொழியைக் கற்றிருக்கிறான் என்றால் இவனுக்குள் ஏதோ ஒரு வெளிச்சம் இருக்கவேண்டும். இந்த அளவுக்கு பயணத்தை நேசிக்கும் ஒருவனை நிராகரிப்பது சரியில்லை அல்லவா?

26 டிசம்பர் 1831 அன்று இங்கிலாந்தில் உள்ள பிளைமவுத் துறைமுகத்தில் இருந்து கிளம்பவேண்டும் என்பது திட்டம். ஹெச்.எம்.எஸ் பீகிள் தயாராக இருந்தது. ஆனால் முந்தைய தினம் கிறிஸ்துமஸ் என்பதால் பயணிகள் யாருமே வரவில்லை. ஆடல்,

பாடல், கொண்டாட்டம் என்று பிறகு தெரிந்தது. மறுநாளுக்குப் பயணத்தை ஒத்தி வைத்தார் கேப்டன். 27-ம் தேதி எல்லோரும் சரியாக வந்துவிட்டார்கள். மொத்தம் 73 பேர். நல்ல காற்று. நல்ல வெளிச்சம். அற்புதமான வானிலை. பீகிள் கப்பல் உற்சாகமாக விடைபெற்றுக்கொண்டது.



சார்லஸ் டார்வின்

இந்தப் பயணத்தின் முக்கிய நோக்கம் அறிவியல் ஆய்வுகள் மேற்கொள்வது. புதிய தீவுகளை, நிலப் பகுதிகளை, உயிரினங்களை, செடி கொடிகளைக் கண்டறிந்து அவற்றைச் சேகரித்து, ஆய்வு செய்வது. இயற்கை விஞ்ஞானிகள், கனிம வளங்களை அறிந்து வைத்திருக்கும் நிபுணர்கள், உயிரியல் ஆய்வாளர்கள் போன்ற பலரும் அந்தப் பயணத்தில் பங்கேற்றிருந்தனர். இவர்களோடுதான் டார்வினும் இருந்தார். கேப்டன் ஃபிட்ஸ்ராய்க்குப் பதற்றமாகத்தான்

இருந்தது. ஏதோ துணிச்சலில் சேர்த்துக்கொண்டுவிட்டோம். இவன் நமக்கு உதவுவானா? உண்மையிலேயே இவனுக்குத் திறமை இருக்குமா? அவசரப்பட்டுவிட்டோமா?

கப்பலைச் சுற்றி வந்த கேப்டன் அதிர்ந்து போனார். ஒரு மூலையில் சுருண்டு படுத்திருந்தார் டார்வின். அருகில் சென்று பார்த்தார். டார்வினின் கண்கள் பாதி மூடியிருந்தன. உடல் சற்றே நடுங்கிக்கொண்டிருந்தது. கப்பல் கிளம்பி சிறிது நேரத்திலேயே இப்படித் துவண்டுவிட்டால் இவன் எப்படி முழுப் பயணத்தைத் தாக்குப்பிடிக்கப் போகிறான்? தவறு செய்துவிட்டேனே, இனி என்ன செய்வது?

4 ஜனவரி அன்று மதேரா என்னும் தீவுக்கு வந்துசேர்ந்தது பீகிள் கப்பல். கேப்டன் இன்னொரு முறை டார்வின் தங்கியிருந்த கேபினுக்குச் சென்று எட்டிப் பார்த்தார். ம்ஹூம், பேச்சு மூச்சே இல்லை. ஆய்வாவது, மண்ணாங்கட்டியாவது. எழுந்து நிற்கக்கூட வலுவில்லை டார்வினிடம். போர்வைக்குள் சுருண்டு படுத்துக் கிடந்தார் டார்வின்.

இரண்டு தினங்கள் கழித்து சாண்டர் குரூஸ் பகுதியில் உள்ள டெனேரைஃப் என்னும் தீவை நெருங்கினர். டார்வின் கேபினில் இருந்து வெளியில் வந்தார். நீண்ட காலமாகவே டெனேரைஃப் பற்றி அவர் கேள்விப்பட்டு வந்திருக்கிறார் என்பதால் அவர் கண்களில் உற்சாகம் நிரம்பியிருந்தது. தொலைவில் தெரிந்த தீவை ஆர்வத்துடன் பார்த்தார்.

அவரைப் பார்த்த கேப்டன் ஃபிட்ஸ்ராய்க்கும் சற்றே உற்சாகம் பிறந்திருந்தது.

‘என்ன டார்வின், நீ முழுப் பயணத்தையும் தூங்கியே கழித்துவிடுவாயோ என்று பயந்துவிட்டேன்.’

டார்வின் சிரித்தார். ‘அதெப்படி? டெனேரைஃப் போகவேண்டும் என்பதற்காகத்தானே இந்தக் கப்பலிலேயே ஏறினேன்.’

‘உன்னால் உண்மையிலேயே ஆய்வுகள் செய்யமுடியுமா?’

‘என்ன இப்படிக் கேட்டுவிட்டீர்கள். என்னிடம் எத்தனை விதமான பறவைகளின் இறகுகள் இருக்கின்றன தெரியுமா? எவ்வளவு பூச்சிகளைப் பிடித்துச் சேமித்து வைத்திருக்கிறேன் தெரியுமா? விதவிதமான கற்கள், வண்ண மண் துகள்கள், சிப்பிகள், வித்தியாசமான மர வேர்கள், எலும்புகள் என்று பலவற்றைச் சேகரித்து வைத்திருக்கிறேன். சில பறவைகளின் உடல்களை வைக்கோல், பஞ்சு வைத்து தைத்து, பாதுகாத்து வைத்திருக்கிறேன். பலவிதமான வேதியியல் பரிசோதனைகள் செய்திருக்கிறேன்.

விதவிதமான வாயுக்கள் உருவாவதைப் பார்த்திருக்கிறேன்.’

கேப்டன் நம்பிக்கையுடன் டெனேரைஃப் நோக்கி கப்பலைச் செலுத்தியபோது சில நபர்கள் சிறிய படகுகளில் அவசர அவசரமாக நெருங்கினார்கள்.

‘நீங்கள்தான் பீகிள் கப்பலின் கேப்டனா? உங்களுக்கு ஓர் அவசர செய்தி வந்திருக்கிறது. நீங்கள் டெனேரைஃப் தீவுக்குச் செல்ல முடியாது. காலரா நோய் பரவிக்கொண்டிருப்பதால் அந்தத் தீவுக்கான வழி மூடப்பட்டுவிட்டது. உடனடியாகப் பாதையை மாற்றிக்கொள்ளுங்கள்.’

கேப்டன் மட்டுமல்ல, டார்வினின் உற்சாகமும் சட்டென்று வடிந்துபோனது. பீகிள் கப்பல் கேப் வெர்டே தீவை நோக்கி நகரத் தொடங்கியது. டார்வின் தன் கேபினுக்குச் சென்று சுருண்டு படுத்துக்கொண்டார். ஆரம்பமே சரியில்லை என்று சலித்துக்கொண்டார் கேப்டன்.

சாண்டியாகோ என்னும் தீவை வந்தடைந்ததும் பீகிள் கப்பலில் இருந்து எல்லோரும் இறங்கினார்கள். டார்வின் வேண்டாவெறுப்பாகத்தான் தரையில் கால் பதித்தார். ஒருவேளை நான் இந்தக் கப்பலில் ஏறியிருக்கவே கூடாதோ? அதிகமாக ஆசைப்பட்டுவிட்டேனோ? கனவு கண்ட இடத்துக்குப் போக முடியாமல் கண்ட இடங்களில் இறங்கி என்ன செய்வது? டெனேரைஃப் தீவுபோல் இன்னோர் இடம் இருக்க முடியுமா?

கரையைவிட்டு நகர்ந்து நடக்க ஆரம்பித்தார் டார்வின். பச்சைப் பசேலென்று மரங்களும் செடி கொடிகளும் பரவிக் கிடந்தன. ஆங்காங்கே சின்னச் சின்ன குட்டைகள், குளங்கள். டார்வின் எல்லாவற்றையும் வேடிக்கை பார்த்தபடி நகர்ந்துகொண்டிருந்தார். குளங்களில் சின்னச் சின்ன மீன்கள் தென்பட்டன. கவனமாகப் பார்த்தார். அந்த மீன்களின் அமைப்பு வித்தியாசமாக இருந்தது. அப்படியே உட்கார்ந்துவிட்டார்.

இந்த மீன்கள் கொஞ்சம் வித்தியாசமாக இல்லை? நோட்டுப் புத்தகத்தை விரித்துக்கொண்டார். வரைய ஆரம்பித்தார். சின்னச் சின்ன குறிப்புகள் எடுத்துக்கொள்ள ஆரம்பித்தார். மீன்களின் கண்கள், உடல் அமைப்பு, அசைந்தாடும் செதில்கள் அனைத்தையும் குறித்துக்கொண்டார். அப்போதுதான் கவனித்தார். இதென்ன நீல நிற மீன் காணாமல் போய் சிவப்பு நிற மீன் தோன்றிவிட்டதா? நீல மீன் எங்கே?

உன்னிப்பாகக் கவனித்தார். சட்டென்று மின்னல் வெட்டியது. நான் பார்ப்பது ஒரே மீன்தான். நீல நிற மீன்தான் தன்னைச் சிவப்பு நிற

மீனாக மாற்றிக்கொண்டிருக்கிறது. அதெப்படி முடியும்? ஒரு மீனால் தன் நிறத்தை மாற்றிக்கொள்ள முடியுமா? ஏன் அப்படிச் செய்கிறது? இந்தத் திறன் மீனுக்கு எப்படி வந்தது? அதற்கு யார் காரணம்? பரபரவென்று எழுத ஆரம்பித்தார் டார்வின்.

பின்னால் வந்த கேப்டன் குழப்பத்துடன் நின்றுகொண்டிருந்தார். ஒரு மீனைப் பார்த்து பக்கம் பக்கமாக என்ன எழுதிக்கொண்டிருக்கிறான் இவன்? உண்மையிலேயே டார்வினின் உடல்நலம் சரியாகத்தான் இருக்கிறதா? சிறிது நேரத்தில் டார்வின் எழுதுவதை நிறுத்திவிட்டு தனக்குத் தானே பேசிக்கொள்ள ஆரம்பித்திருந்தார்.

சரி, இந்தப் பயணம் தோல்வியடைந்துவிட்டது என்னும் முடிவுக்கு வந்துசேர்ந்தார் கேப்டன். வரலாற்றின் போக்கை மாற்றியமைத்த முக்கியப் பயணமாக அது மாறப் போவது அவருக்கு அப்போது தெரியாது.

*

பீகிள் கப்பல் எங்கே கரை ஒதுங்கினாலும் சரி. சார்லஸ் டார்வின் முதல் ஆளாகப் பாய்ந்து இறங்கி அங்கே, இங்கே சுற்ற ஆரம்பித்துவிடுவார். மீன், பூச்சி, பறவை, விலங்கு என்று எதைப் பார்த்தாலும் அதன் பின்னாலேயே போய்விடுவார். மீன் எப்படி நீந்துகிறது, கொக்கு எப்படிப் பறக்கிறது, பூச்சிகளின் கண்கள் எப்படியிருக்கும் என்று ஆராய ஆரம்பித்தால் நேரம் போவதே தெரியாது. திடீரென்று அவருக்குச் சந்தேகங்கள் தோன்றும். ஒரு வெட்டுக்கிளி தன் உணவை எப்படிச் செரிமானம் செய்கிறது? காய்ந்த குச்சிபோல் இருக்கும் இந்தப் பூச்சியின் உடலுக்குள் என்னென்ன இருக்கும்? தெரிந்துகொள்ளாவிட்டால் தலையே வெடித்துவிடும் என்பதால் கையோடு வெட்டுக்கிளியையும் பூச்சியையும் பிடித்து, கத்தியால் கீறி நுணுக்கமாக ஆய்வு செய்ய ஆரம்பித்துவிடுவார்.

கூடவே குறிப்புகளும் எழுதத் தொடங்கிவிடுவார். தாவரங்கள், சிப்பிகள், மரப்பட்டைகள், விதைகள், செடிகொடிகள் எல்லாமே அவரைப் பரவசப்படுத்தின. பார்க்கும் எல்லாவற்றிலிருந்தும் ஒவ்வொன்றைக் கப்பலில் போட்டு கொண்டுபோய்விடவேண்டும் என்று விரும்பினார். பீகிள் கப்பலைச் சேர்ந்த பலர் கரை ஒதுங்கியவுடன் மனிதர்களிடம்தான் சென்று பேசுவார்கள். டார்வின் நேர் எதிராக, மனிதர்களைத் தவிர மற்ற எல்லா உயிர்களிடமும் பேசுவார். அபூர்வமாகத்தான் மனிதர்களை அவர் பார்க்கவே செய்வார்.

பிரேசிலிலும் அதுதான் நடந்தது. காடுகள் காந்தம்போல் அவரை இழுத்துக்கொண்டன. ஒரு கம்பளிப்பூச்சி விடாமல் எல்லாவற்றையும்

பார்த்து, ஆராய்ந்து, பிடித்து, சிலவற்றைப் பையில் போட்டுக்கொண்டு மகிழ்ச்சியாகச் சுற்றிக்கொண்டிருந்தார். தற்செயலாக அவர் பார்வை மனிதர்கள் மீது விழுந்தது. அவர்கள் கறுப்பு நிறத்தில் இருந்தார்கள். மரம் வெட்டிக்கொண்டும், மூட்டை சுமந்துகொண்டும், சில நேரம் மனிதர்களையே சுமந்துகொண்டும் அவர்கள் சென்றுகொண்டிருந்தனர். டார்வின் சற்றுநேரம் அவர்களையே பார்த்துக்கொண்டிருந்தார்.

பிறகு கப்பலுக்குத் திரும்பிவிட்டார். கேப்டன் ஃபிட்ஸ்ராய் அப்போது உணவு மேஜையில் அமர்ந்திருந்தார். டார்வினைப் பார்த்ததும் அவர் ஆச்சரியமடைந்தார்.

'என்ன டார்வின், அதற்குள் பிரேசிலைப் பார்த்துவிட்டாயா? பெரிய காடாக இருக்கிறதே, நீ சுற்றிவருவதற்கு நேரமாகும் என்று நினைத்தேன்.'

'நானும் அப்படித்தான் நினைத்தேன். ஆனால் வழியில் நான் கண்ட சில கறுப்பின மனிதர்கள் என்னைச் சங்கடப்படுத்திவிட்டார்கள்' என்றார் டார்வின்.

'அவர்கள் எப்பொழுதும் இப்படித்தான் டார்வின். நாகரிகம் என்றால் என்னவென்றே தெரியாத கூட்டம்.'

டார்வினின் முகம் மாறியது. 'நான் சொல்ல வந்ததை நீங்கள் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. மிருகங்களைப்போல் சில வெள்ளையர்கள் அவர்களை வேலை வாங்கிக்கொண்டிருக்கிறார்கள். சக மனிதர்களை இப்படியெல்லாம் கஷ்டப்படுத்துபவர்கள்தான் நாகரிகம் தெரியாதவர்கள்.'

கேப்டன் ஃபிட்ஸ்ராயால் இதை ஏற்கமுடியவில்லை. 'பல மனிதர்களால் அடிமைகளாக மட்டுமே இருக்கமுடியும் டார்வின். அவர்களுடைய திறமை அவ்வளவுதான். வெகு சிலரால் மட்டுமே எஜமானர்களாக மாறமுடியும். நீ பார்த்த கறுப்பின மக்கள் அடிமைகளாக இருப்பதற்காகவே பிறந்தவர்கள். அவர்களை வேலை வாங்குவது தவறில்லை.'

டார்வினால் அந்த இடத்தில் அமர்ந்திருக்கவே முடியவில்லை. கப்பலின் கேப்டன் வயதில் மூத்தவர், அவர் மனம் வைத்ததால்தான் இந்தப் பயணமே சாத்தியமானது. ஆனால் அதற்காக அவர் என்ன சொன்னாலும் கேட்டுக்கொண்டிருக்க முடியாது அல்லவா?

டார்வின் தன் குரலை உயர்த்தினார். 'எல்லா உயிர்களும் ஒன்று போலதான் பிறக்கின்றன கேப்டன். மனிதர்களில் மேலானவர்கள், கீழானவர்கள் என்றெல்லாம் எந்த வித்தியாசமும் இல்லை. வெள்ளையாக இருப்பவர்கள் எஜமானவர்களாக இருக்கவேண்டும்,

கறுப்பு நிறம் இருந்தால் அடிமை வேலைதான் செய்யவேண்டும் என்றெல்லாம் சொல்வது அறிவியல் உண்மைக்கு எதிரானது.’

கோபம் தலைக்கு ஏறிவிட்டது கேப்டனுக்கு.‘நீ மனிதர்களை ஆராய்ச்சி செய்வதை விட்டுவிடு. விலங்குகளும் பூச்சிகளும்தான் உனக்கு லாயக்கு. இனி என்னிடம் வராதே.’

டார்வினும் எழுந்து சென்றுவிட்டார். பிறகு எல்லோரும் வந்து சமாதானம் செய்து வைத்தார்கள். நான் உன்னிடம் கடிந்துகொண்டது தவறுதான் என்று கேப்டன் டார்வினிடம் மன்னிப்பு கேட்டுக்கொண்டார்.

பயணம் தொடர்ந்தது. அர்ஜெண்டினாவில் புன்ட்டா அல்டா என்னும் இடத்தில் மிகப் பெரிய புதையல் ஒன்று டார்வினுக்குக் கிடைத்தது. நீண்ட காலத்துக்கு முன்னால் அழிந்து போன ஒரு பாலூட்டியின் மிகப் பெரிய எலும்புக்கூடுதான் அந்தப் புதையல். வேறு சில அழிந்த விலங்குகளின் எலும்புத் துண்டுகளும் பற்களும்கூடக் கிடைத்தன. இந்த மிருகங்கள் ஏன் அழிந்து போயின? அதிக குளிர் அல்லது அதிக வெப்பம் காரணமாக அவை அழிந்திருக்குமா? இந்த எலும்புகளை வைத்துக்கொண்டு அந்தப் பாலூட்டிகள் எப்படி இருந்திருக்கும் என்று பார்க்க முடியுமா? இப்படி எத்தனை விதமான மிருகங்கள் இதுவரை உலகில் இருந்து அழிந்து போயிருக்கும்? மற்ற விலங்குகள் எப்படி அழிவில் இருந்து தப்பித்தன?

தென் அமெரிக்க நாடுகளில் உள்ள பழங்குடி மக்களை ஊன்றி கவனித்து குறிப்புகள் எடுத்துக்கொண்டார் டார்வின். அவர்கள் எப்படிப் பேசுகிறார்கள், எந்த மொழியைப் பயன்படுத்துகிறார்கள் என்பதைக் கவனித்தார். அவர்களுடைய சமூகம் எப்படிச் செயல்படுகிறது? அவர்கள் எப்படி உணவு சமைக்கிறார்கள்? எப்படிக் கற்கிறார்கள்? எப்படி வீடு கட்டி வாழ்கிறார்கள்? அனைத்தையும் தெரிந்துகொள்ள ஆசைப்பட்டார்.

டார்வினைப் பொருத்தவரை ஒரு மீனும் ஒரு பூச்சியும் ஒரு செடியும் ஒரு மனிதனும் ஒன்றுதான். எல்லாமே அவரை வசீகரித்தன. எல்லாவற்றிலும் பல சிறப்பம்சங்கள் இருக்கின்றன என்று அவர் தீவிரமாக நம்பினார். ஒரு சின்ன பறவையிடம் இருந்து பல ஆச்சரியமூட்டும் உண்மைகளைக் கற்கமுடியும் என்று தன்னுடன் வந்தவர்களிடம் சொன்னார். பறவைகளிடமே இவ்வளவு கற்கமுடியும் என்னும்போது சிந்திக்கத் தெரிந்த ஒரு மனிதரிடம் இருந்து இன்னும் எவ்வளவோ அற்புதங்களைக் கற்கமுடியும் அல்லவா? அதைச் செய்யாமல் அவர்களை அடிமைப்படுத்தி வைத்திருப்பது எவ்வளவு பெரிய தவறு!

காட்டு விலங்குகளுக்கும் வீட்டு விலங்குகளுக்கும் வேறுபாடு இல்லை. அவை ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவை என்பது டார்வினுக்குப் புரிந்தது. கறுப்பு மனிதனுக்கும் வெள்ளை மனிதனுக்கும் இடையில் எந்த வேறுபாடும் இல்லை. படித்த மனிதனுக்கும் படிக்காதவனுக்கும் இடையிலும் எந்த வித்தியாசமும் இல்லை. ஒரு பழங்குடி மனிதரை அழைத்துச் சென்று இங்கிலாந்தில் படிக்க வைத்தால் அவரால் நன்றாகக் கல்வி கற்கமுடியும்.

சிலி, கலபாகஸ் தீவுகள், கேப் டவுன், நியூசிலாந்து, சிட்னி என்று டார்வின் கண்ட ஒவ்வொரு புதிய பகுதியும் அங்கு அவர் கண்ட உயிரினங்களும் அவருடைய நம்பிக்கைகளை உறுதிசெய்தன. மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் இடையில் எந்த அடிப்படை வேறுபாடுகளும் இல்லை என்பது அவருக்குக் கண்கூடாகத் தெரிந்தது. இந்த உயிர்கள் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு வடிவங்களில் காட்சியளிக்கின்றன. பறவைகள், மீன்கள், கொரிக்கும் விலங்குகள், பாலூட்டிகள், தாவரம் என்று பல பிரிவுகளில் பிரிந்துகிடக்கின்றன. ஒவ்வொன்றும் ஒரு தினுசு. இருந்தாலும் அவை அனைத்தும் ஒரே குடும்பம்.

மனிதர்களும் அப்படித்தான். நிறம், மொழி, மதம், நாடு என்று பல பிரிவுகளாக சிதறியிருந்தாலும் அடிப்படையில் மனிதர்கள் எல்லோரும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களுடைய மூதாதையர் ஒருவர்தான். அவர்களில் சிலரை அடிமைகள் என்றும் எஜமானர்கள் என்றும் பிரித்துப் பார்ப்பது தவறு. நல்லவர்கள் என்று சிலரை ஏற்பதும், கெட்டவர்கள் என்று சிலரை ஒதுக்கிவைப்பதும் தவறானது. ஆரம்பத்தில் எல்லா உயிர்களும் எளிமையாகவே இருந்தன. பிறகு மெல்ல மெல்ல அவை மாற்றம் அடைந்தன என்னும் முடிவுக்கு வந்துசேர்ந்தார் டார்வின். இந்த மாற்றங்கள் ஏற்பட பல லட்சக்கணக்கான ஆண்டுகள் ஆயின. பாக்டீரியா தொடங்கி மனிதன்வரை அனைத்து உயிர்களும் இப்படிப் படிப்படியாகத்தான் வளர்ச்சியடைந்தன. இதனைப் பரிணாம வளர்ச்சி என்று பின்னர் அழைத்தார் டார்வின்.

அதென்ன பரிணாம வளர்ச்சி? சூழ்நிலைக்குத் தகுந்தபடி தங்களை தகவமைத்துக்கொள்ளும் உயிரினங்கள் தொடர்ச்சியாக வாழ்கின்றன. இந்த மாற்றங்கள் அடுத்தடுத்த சந்ததிகளுக்கு மாற்றப்படும்போது அவை படிப்படியாக வளர்ச்சியடைகின்றன. இதெல்லாம் நடப்பதற்கு லட்சம் அல்ல கோடிக்கணக்கான ஆண்டுகள்கூட ஆகும். தங்களை மாற்றிக்கொள்ள முடியாத உயிர்கள் டைனோசர்போல் அழிந்துவிடுகின்றன. உயிரினங்களின் தோற்றம் என்னும் நூலில் இன்னொரு முக்கிய விஷயத்தை டார்வின் சொன்னார். மனிதனும் குரங்கும் ஒரே மூதாதையரிடம் இருந்தே

தோன்றின என்றார் அவர்.

இயற்கையின் ரகசியத்தைக் கண்டுபிடித்த தலைசிறந்த மனிதராக சார்லஸ் டார்வின் இன்று கொண்டாடப்படுகிறார். அதற்கு பீகிள் கப்பலுக்குத்தான் நாம் நன்றி சொல்லவேண்டும்.

- சார்லஸ் டார்வின் 12 பிப்ரவரி 1809 அன்று பிறந்தார். அதே தினத்தில் பிறந்த இன்னொரு பிரபலம், ஆபிரஹாம் லிங்கன்.
- சிறிது காலம் தன் தந்தைக்கு உதவியாக மருத்துவப் பணிகளில் ஈடுபட்டார் டார்வின். நிச்சயம் தன்னைப் போலவே டார்வினும் ஒரு மருத்துவர் ஆகிவிடுவார் என்று தந்தை கனவு கண்டார். அது நிறைவேறவில்லை.
- குறிப்பாக பீகிள் பயணத்துக்குப் பிறகு டார்வின் பல்வேறு உடல் உபாதைகளுக்கு ஆளானார். ஏதேனும் உடல்நலக் குறைவு ஏற்பட்டுக்கொண்டே இருந்தது.
- விதவிதமான உயிரினங்களைக் கண்டு மட்டும் அல்ல, உண்டும் மகிழ்ந்தவர் டார்வின். உடும்பு, பெரிய ஆமை, கொறிக்கும் எலி என்று தொடங்கி பல நாட்டு விலங்குகளை, பறவைகளை அவர் விரும்பிச் சாப்பிட்டிருக்கிறார்.
- டார்வினின் மூக்கு எனக்குப் பிடிக்கவில்லை, அதனாலேயே அவரை நிராகரிக்கலாம் என்று நினைத்தேன் என்று தன் குறிப்புகளில் எழுதினார் கேப்டன் ஃபிட்ஸ்ராய்.
- பீகிள் பயணம் முடிந்து 20 ஆண்டுகள் கழிந்த பிறகுதான் பரிணாம வளர்ச்சி பற்றிய தன் ஆய்வை டார்வின் வெளியிட்டார். படித்தால் என்ன சொல்வார்களோ என்னும் பயமே காரணம்.
- டார்வின் அஞ்சியதுதான் நடந்தது. அதெப்படி குரங்கிலிருந்து மனிதன் தோன்றுவான் என்று பலர் சீறினார்கள். குரங்கிலிருந்து மனிதன் தோன்றவில்லை, இருவருடைய மூதாதையரும் ஒன்று என்றுதான் சொல்கிறேன் என்று விளக்கினார் டார்வின்.
- டார்வினின் கண்டுபிடிப்புகள் பலத்த எதிர்ப்புக்கு உள்ளாயின. நீண்ட காலத்துக்குப் பிறகு, மேலும் பல ஆய்வாளர்கள் டார்வின் சொன்னதை நிரூபித்த பிறகுதான் ஒரு வழியாக உலகம் அவரை ஏற்றுக்கொண்டது.
- 2000ம் ஆண்டு தொடங்கி பிரிட்டன் 10 பவுண்ட் தாளில் டார்வினின் படமும் பீகிள் கப்பலின் படமும் இடம்பெற்றுவருகிறது.
- நூற்றுக்கும் அதிகமான உயிரினங்களுக்கும் தாவரங்களுக்கும்

டார்வினின் பெயர் சூட்டப்பட்டுள்ளது.

# 12. வால்டர் ராலே

## தங்க வேட்டை

வால்டர் ராலேவுக்குக் கவிதை எழுதத் தெரியும். கத்தி பிடித்து சண்டை போடத் தெரியும். அரசியலில் ஈடுபாடு உண்டு. உளவு வேலைகள் பார்த்திருக்கிறார். அயர்லாந்தில் நிறைய நிலம் இருந்தது. இருந்தாலும் ராலேவின் விருப்பம் ஒன்றுதான். சாகசங்கள் நிறைந்த கடல் பயணங்கள் மேற்கொள்ளவேண்டும். இதுவரை யாரும் கண்டிராத புதிய இடங்களுக்குச் செல்லவேண்டும்.

அவருடைய கனவு 1584-ம் ஆண்டு நிறைவேறியது. ஒரு நாள் எலிசபெத் மகாராணியிடம் இருந்து அனுமதி கடிதம் அவருக்கு வந்தது. ‘இதுவரை ஆக்கிரமிக்கப்படாத எந்தப் பகுதியையும் ஆக்கிரமிக்கலாம். கிடைப்பதில் ஐந்தில் ஒரு பகுதியை ராலே வைத்துக்கொள்ளலாம்’ என்றது அந்த அரசாங்க உத்தரவு. உற்சாகமாகக் கிளம்பினார் ராலே. கப்பல்கள், ஆள்கள் என்று பயணத்துக்குத் தேவைப்படும் அனைத்தும் ராணியிடம் இருந்து வந்துவிடும். பிறகென்ன கவலை?

ராலேவின் கனவு, தென் அமெரிக்கா. குறிப்பாக, எல் டொராடோ. அதிலும் குறிப்பாக ஆண்டிஸ் (ஆந்திய) மலைத்தொடர்தான் அவருடைய இலக்கு. இந்த மலைப் பகுதியில் சில பழங்குடிகள் வசிந்துவந்தார்கள். அவர்களுக்கு வெளியுலகம் பற்றி அவ்வளவாகத் தெரியாது. நீண்ட மலைத் தொடர் என்பதால் அதைக் கடந்து வெளி மக்கள் உள்ளே வருவது கஷ்டம். அதேபோல் இந்தப் பழங்குடிகளும் வெளியில் வரமுடியாது. விஷயம் என்னவென்றால் இந்தப் பழங்குடிகள் மலை மலையாகத் தங்கம் வைத்திருக்கிறார்கள். எப்படிக் கிடைத்தது? எங்கிருந்து வந்துசேர்ந்தது? ஒருவருக்கும் தெரியாது. ஆனால் ஆண்டிஸ் (ஆந்திய) மலை அளவுக்கு நிச்சயம் தங்கம் அவர்களிடம் இருக்கிறது.

இந்தப் பழங்குடிகள் ஒவ்வொருமுறை தங்கள் தலைவரைத் தேர்ந்தெடுக்கும்போதும் ஆற்றங்கரைக்கு வந்து கொண்டாடுவார்கள். அப்போது புதிய தலைவர் உடல் முழுக்க தங்கம் மினுமினுக்கும். பிறகு தங்கத்தைப் பொடியாக்கி அந்தப் பொடியைத் தலைமுதல்

பாதம்வரை பூசிவிடுவார்கள். அப்போது பழங்குடிகள் தங்களிடம் உள்ள தங்க நகைகளையும் தங்கக் கட்டிகளையும் எடுத்து ஆற்றில் வீசுவார்கள். இப்படித் தங்கத்தை வீசினால் அது ஆற்றில் உள்ள கடவுளுக்குப் போய்ச்சேரும் என்பது அவர்கள் நம்பிக்கை.

அவர்கள் என்ன வேண்டுமானாலும் நம்பிக்கொண்டு போகட்டும். எனக்குத் தேவை அவர்களிடமுள்ள தங்கம் மட்டுமே என்று நினைத்துக்கொண்டார் ராலே. ஆற்றில் போடும் அளவுக்குத் தங்கம் இருக்கிறதென்றால், அதைப் பொடியாக்கி உடல் முழுக்கப் பூசிக்கொள்ள முடிகிறதென்றால் எவ்வளவு தங்கம் அவர்களிடம் இருக்கவேண்டும்? ராலேவின் திட்டம் தென் அமெரிக்காவுக்குச் செல்வது. அங்கே ஒரு காலனியை பிரிட்டனுக்காக உருவாக்குவது. அப்படியே தங்க மலையைக் கண்டுபிடித்து முடிந்த அளவுக்குப் பெயர்த்து கையோடு கொண்டுவருவது. அதற்குப் பிறகு என்னை மிஞ்ச இந்த உலகில் யார் இருக்கிறார்கள்?

கடல் அவரை மயக்கியது. உற்சாகமாகத் தன் குழுவினருடன் கப்பலில் ஏறிக்கொண்டார். உணவுப் பொருள்கள், உதவ ஆள்கள் என்று பல கப்பல்கள் பின்தொடர்ந்தன. ராஜ மரியாதை! வரும்போது தங்கத்தைக் கொண்டுவர இந்தக் கப்பல்கள் போதுமா என்னும் ஒரு கவலை மட்டும்தான் அவருக்கு. இதோ கப்பல் கரையைத் தொட்டதும் சரித்திரம் படைத்துவிடுவேன் என்றுதான் நம்பினார்.

கப்பல் கரையைத் தொட்டது. ஒரு முறையல்ல, இரண்டு முறை. மீண்டும் ஒருமுறை போனார். இப்போது வட கரோலினா என்று இன்று அழைக்கப்படும் பகுதியை ஆர்வத்துடன் சுற்றிவந்து பார்வையிட்டார். புளோரிடா வரைவந்தார். இந்தப் பகுதிக்கு இதுவரை யாரும் வந்ததில்லை என்பதைக் கேள்விப்பட்ட ராலே, வர்ஜீனியா என்று அதற்குப் பெயர் வைத்தார். ஒரு புதிய இடத்தைக் கண்டுபிடித்து அதற்குப் பெயரும் சூட்டிவிட்டோம், அதுவும் மகாராணியின் பெயரையே (விர்ஜின் ராணி என்று எலிசபெத்தை அழைப்பார்கள்) வைத்துவிட்டோம் என்பதில் அவருக்கு மகிழ்ச்சி.

அமெரிக்காவை பிரிட்டனின் காலனியாக மாற்றிவிடலாம் என்று அப்போதே அவருக்குத் தோன்றிவிட்டது. காலி இடங்களையும் பழங்குடிகள் வசிக்கும் இடங்களையும் ஆக்கிரமித்துக்கொள்வது தவறில்லை என்பது அவர் நம்பிக்கை. எல் டொராடோவை அவர் தேடியதும் இந்த நம்பிக்கையின் அடிப்படையில்தான். தங்கத்தின் அருமை, அதன் மதிப்பு தெரியாதவர்களிடம் மலை மலையாகத் தங்கம் இருந்து என்ன பயன்? எனவே, அதைக் கொள்ளையடிப்பதில் தவறில்லை என்பதுதான் ராலேவின் வாதம். ஆனால் என்ன செய்வது? எல் டொராடோ கிடைத்தால் தானே?

தொடர்ந்து கப்பலில் மிதந்துகொண்டே இருந்தார் ராலே. எப்படியாவது கண்ணில் தங்க மலை பட்டுவிடாதா என்று தேடித் தேடி அலைந்தார். வெனிசூலாவில் எல் டொராடோ இருக்கிறது என்று யாரோ சொல்ல, அப்படியா, உடனே எடு கப்பலை என்று அங்கே போனார். ஓரினோகோ என்னும் ஆற்றைச் சுற்றிச் சுற்றி வந்தார். 400 மைல் தொலைவு பாயும் மிக நீள ஆறு அது. கடலையும் மழையையும் புயலையும்தான் பார்க்கமுடிந்ததே தவிர, அவர் தேடிய இடம் அகப்படவேயில்லை.



வால்டர் ராலே

இதற்கிடையில் மகாராணியும் நச்சரிக்க ஆரம்பித்துவிட்டார். ‘என்ன ஆச்சு வால்டர் ராலே? தங்கம் கிடைத்ததா இல்லையா? உனக்காக கப்பல்களையும் ஆள்களையும் அனுப்பி என்ன பலன்?’ இதோ கண்டுபிடித்துவிடுகிறேன், அதோ அடுத்த மாதம் எல் டொராடோ

கிடைத்துவிடும் என்று சாக்குபோக்கு சொல்ல ஆரம்பித்தார். ஆனால் அவருக்கும் கொஞ்சம் கொஞ்சமாக நம்பிக்கை போக ஆரம்பித்துவிட்டது. இந்த எல் டொராடோ எங்கேதான் இருக்கிறது?

ஒருவருக்கும் தெரியவில்லை. தனியாகச் சிலர் தேடினார்கள். பலர் கூட்டாகச் சேர்ந்து தேடினார்கள். சிலர் கடல் வழியாகவும் சிலர் நிலம் வழியாகவும் சென்று தேடிப் பார்த்தார்கள். தங்கம் எனக்குத்தான் வேண்டும், இல்லை எனக்குத்தான் என்று சண்டையிட்டுக்கொண்டார்கள். மற்றவர்களுக்குக் கிடைத்துவிடக் கூடாது என்பதற்காகவே பலரைக் கொல்லவும் செய்தார்கள். பலர் தங்கள் வாழ்நாள் முழுக்கத் தேடித் தேடி அலுத்து ஓய்ந்து போனார்கள்.

எல் டொராடோ கிடைக்காமல் போனதில் ராலேவுக்கு வருத்தம் இருந்ததே தவிர, வெறுப்பு வரவில்லை. அவர் இறுதிவரை நம்பிக்கை இழக்கவேயில்லை. இன்னும் பல கடல்களைக் கடந்துபோனால் ஒருவேளை கிடைக்குமோ? ஒருவேளை நாம் வெனிசூலாவில் சரியாகத் தேடாமல் வந்துவிட்டோமோ என்றெல்லாம் எண்ணினார். இப்படியே பயணம் மேல் பயணம் சென்றுகொண்டிருந்தால் ஒரு நாள் அகப்படாமலா போய்விடும் என்று சமாதானமும் செய்துகொண்டார். அவர் எதிர்பார்ப்பு இறுதிவரை நிறைவேறவில்லை.

ஆனால் எதிர்பாராவிதமாகப் பல விஷயங்கள் நடந்துவிட்டன. ராலேவை ஆதரித்துவந்த எலிசபெத் ராணி அவருக்கு எதிராகத் திரும்பினார். எலிசபெத்தின் மரணத்துக்குப் பிறகு ஆட்சியில் அமர்ந்த முதலாம் ஜேம்ஸ் வெறுத்ததோடு இல்லாமல், அவரைச் சிறையிலும் தள்ளினார். இத்துடன் விட்டிருந்தாலும் பரவாயில்லை. மரண தண்டனையும் விதித்துவிட்டார். 29 அக்டோபர் 1618 அன்று ராலே இறந்து போனார்.

வால்டர் ராலே இன்று எதற்காக நினைவுகூரப்படுகிறார் தெரியுமா? எங்கெங்கோ சென்று அவர் இங்கிலாந்துக்குக் கொண்டுவந்து சேர்த்த அல்லது அறிமுகப்படுத்திய இரண்டு விஷயங்களுக்காக. அவை, புகையிலை மற்றும் உருளைக்கிழங்கு.

ஒரு முக்கியமான விஷயத்தைக் கடைசி வரை ராலே தெரிந்துகொள்ளவே இல்லை. எல் டொராடோ என்பது முழுக்க முழுக்க ஒரு கற்பனை. தங்க மலை என்று ஒன்று இல்லவே இல்லை!

- பிபிசி 2002-ம் ஆண்டு நடத்திய கருத்துக் கணிப்பின்படி இங்கிலாந்தின் தலைசிறந்த 100 பேரில் ஒருவராக வால்டர் ராலே தேர்ந்தெடுக்கப்பட்டார்.
- ஒரு கோட்டையில் சிறை வைக்கப்பட்டபோது, ராலே உலக

வரலாறு பற்றி ஒரு புத்தகம் எழுதினார். ஆறு மொழிகளில் உள்ள நூல்களை அதற்காக அவர் வாசித்தார்.

- ராலே தன் பயணங்கள் மூலம் பெரிய அளவில் வருமானம் எதுவும் ஈட்டவில்லை.
- எலிசபெத் ராணியின் அரண்மனை தோழிகளில் ஒருவரை ராலே திருமணம் செய்துகொண்டார். அது ராணிக்குப் பிடிக்கவில்லை.
- ராலேவின் நினைவாக வட கரோலினாவின் தலைநகரத்துக்கு அவர் பெயர் சூட்டப்பட்டது.

# 13. சார்லஸ் வில்லியம் பிபி

## கடலுக்குள் ஒரு பயணம்

மார்கோ போலோ, வாஸ்கோ ட காமா, கொலம்பஸ் போல் இதுவரை நாம் பார்த்த பயணிகள் எல்லோரும் தீவிரமான ஒரு தேடலுடன் கடல்களைத் தாண்டிச் சென்றவர்கள். அவர்கள் எதைத் தேடினார்கள்? புதிய இடங்களைத் தேடினார்கள். அல்லது பழைய இடங்களுக்குச் செல்ல புதிய வழிகளைத் தேடினார்கள். தங்கள் நாட்டிலுள்ள பொருள்களை விற்பதற்குச் சந்தை தேவைப்படும் என்பதால் கடலில் சென்றார்கள். சிலர் தங்கம் தேடினார்கள். பலர் மசாலாப் பொருள்களைத் தேடினார்கள். சார்லஸ் டார்வின் போன்றவர்கள் புதிய உயிர்களைத் தேடிப் பார்க்கும் ஆர்வத்துடன் கடல் கடந்து சென்றார்கள். வில்லியம் பிபி என்பவரும் ஒரு கடல் பயணிதான். ஆனால் மற்றவர்கள் அனைவரையும்விட இவர் வேறுபட்டவர்.

சார்லஸ் வில்லியம் பிபி பிறந்தது நியூ யார்க்கில். எல்லோரையும்போல் பள்ளியில் படித்தார். பிறகு கல்லூரியில் சேர்த்துவிட்டார்கள். பாடம், பரிட்சை, வீட்டுப் பாடம் என்று ஒழுங்காகத்தான் படித்துக்கொண்டிருந்தார். என்ன ஆனதோ, ஏது ஆனதோ தெரியவில்லை, திடீரென்று கல்லூரியை விட்டு நின்றுவிட்டார். யார் சொல்லியும் கேட்கவில்லை. இனி படிக்கமாட்டேன் என்று விடாப்பிடியாக மறுத்துவிட்டார். படிக்காவிட்டால் பன்றிதான் மேய்க்கவேண்டும், பரவாயில்லையா என்று கேட்டபோது பிபியின் முகம் மலர்ந்தது. ‘ஆம் அதற்காகத்தான் நான் படிப்பையே விட்டேன். பன்றி மட்டுமல்ல, பறவை, மிருகம் எல்லாவற்றையும் இனி மேய்க்கப் போகிறேன்’ என்று பதிலளித்தார் அவர்.

பாடப் புத்தகங்களைப் பரணில் ஏற்றிவிட்டு அவர் நேராக எங்கே சென்றார் தெரியுமா? நியூ யார்க் உயிரியல் பூங்காவுக்கு. பறவைகளைக் கவனித்துக்கொள்ள வேண்டும், விருப்பமா என்று கேட்டபோது மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டார். அவ்வளவுதான், அவர் வாழ்க்கை அன்றிலிருந்து அடியோடு மாறிவிட்டது. நாள்

முழுக்கப் பறவைகளைப் பார்த்துக்கொண்டே இருந்தார். பறவை என்று பொதுவில் சொல்லிவிடுகிறோம். அதில்தான் எத்தனை எத்தனை வகைகள்? எத்தனை எத்தனை வண்ணங்கள்? ஒரு கொக்கின் கண்ணை மட்டும் ஒரு நாள் முழுக்கப் பார்த்துக்கொண்டிருக்கலாமே! கால்கள்? அடடா, ஒவ்வொரு பறவையின் காலும் ஒவ்வொரு விதமாக இருக்கிறதே! எல்லாவற்றையும்விட பிரமாதம் இறக்கைகள் அல்லவா?

ஒரு பறவை எப்படிச் சாப்பிடும்? எப்படி உரையாடும்? குளிரை எப்படித் தாங்கிக்கொள்ளும்? கூர்ந்து கவனிக்கத் தொடங்கினார். குறிப்பாக கடனுச்ண்ச்ணt எனப்படும் காட்டுக்கோழிப் பறவை பிபியை மிகவும் கவர்ந்துவிட்டது. இதில் மொத்தம் எத்தனை பிரிவுகள் இருக்கும், எங்கெல்லாம் பரவியிருக்கும் என்று தேடத் தொடங்கினார். காட்டுக்கோழிகள் பற்றி ஏதேனும் ஆய்வுகள் நடத்தப்பட்டிருக்கின்றனவா என்று பார்த்தார். சரி, நாமே ஏன் செய்யக்கூடாது என்று ஒரு கட்டத்தில் அவருக்குத் தோன்றியது.

அந்த வனவிலங்குப் பூங்காவில் சில புதுமையான மாற்றங்களையும் செய்தார் பிபி. பறவைகளை அப்படியே அள்ளிக்கொண்டுவந்து கம்பி போட்ட கூண்டுகளில் போட்டு மூடிவிடுவது சரியல்ல என்று நினைத்தார். ஒரு வனவிலங்குப் பூங்கா என்பது சிறைச்சாலை அல்ல. மக்கள் பறவைகளைக் கண்டு இன்புறவேண்டும் என்பது எந்த அளவுக்கு முக்கியமோ அந்த அளவுக்கு முக்கியம் பறவைகள் இன்பமாக இருக்கவேண்டும் என்பதும். எனவே பிபி அந்த இடத்தை ஒரு காடுபோல் மாற்றியமைத்தார். மரங்கள், செடிகள், வண்ண மலர்கள் ஆகியவை நிறைந்த பகுதிகளில் பறவைகளை இடம் மாற்றினார். இங்கே முன்பு இருந்ததைக் காட்டிலும் சுதந்தரமாகவும் கிட்டத்தட்ட வீட்டில் இருக்கும் உணர்வுடனும் பறவைகள் வாழமுடியும் என்று அவர் நம்பினார்.

1900 வாக்கில் பிபி தனது சுற்றுப் பயணங்களை ஆரம்பித்தார். அமெரிக்காவின் கிழக்கு பகுதி, கனடா என்று விரிவாகச் சுற்றி வர ஆரம்பித்தார். அவருக்கு இப்போது பூங்காவில் நல்ல பெயர் கிடைத்திருந்தது. எனவே அவர்கள் பிபியின் பயண ஆர்வத்தை ஊக்கப்படுத்தினார்கள். அவர் எங்கே சுற்றினாலும் பறவை, விலங்கு என்றுதான் ஆராய்ந்துகொண்டிருப்பார் என்று அவர்களுக்குத் தெரியும். சிலர் மட்டும் முணுமுணுத்தனர். இப்படி அடிக்கடி விடுமுறை எடுத்துக்கொள்ளும் ஒருவரை எதற்காக இங்கே பணியில் வைத்துக்கொள்ளவேண்டும் என்று அவர்கள் கேள்வி எழுப்பினர்.

பிபி எதைக் கண்டும் அஞ்சவில்லை. உலகிலுள்ள பறவைகளை எல்லாம் பார்த்துவிடவேண்டும் என்னும் துடிப்பு மட்டும்தான்

அவரிடம் இருந்தது. முதலில் அவர் அட்லாண்டிக் பெருங்கடலைக் கடந்து லண்டன் சென்றார். தேவைப்படும் பொருள்களை எல்லாம் வாங்கி நிரப்பிக்கொண்டு, அங்கிருந்து கிளம்பி மத்தியத் தரைக்கடலைக் கடந்து எகிப்து சென்றடைந்தார். சூயஸ் கால்வாய் வழியாக இந்தப் பயணம் அமைந்தது. அங்கிருந்து இலங்கை. இந்த முறை இந்தியப் பெருங்கடலைக் கடக்கவேண்டியிருந்தது. சரி, இங்கெல்லாம் சென்று என்ன செய்தார் என்று நினைக்கிறீர்கள்? கோழி, கொக்கு, கிளி என்று தேடித் திரிந்தார். பார்க்கும் பறவைகளைப் பற்றியெல்லாம் விசாரித்தும் படித்தும் தெரிந்துகொண்டார். ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு வகையான பறவைகள் இருப்பதையும் அவை வெவ்வேறு சூழல்களில் வளர்வதையும் ஆச்சரியத்துடன் கவனித்தார். பிறகு நிறைய குறிப்புகள் எடுத்துக்கொண்டார்.



சார்லஸ் வில்லியம் பிபி

இலங்கையில் இருந்து கல்கத்தா வந்தார். இமயமலையில் மட்டுமே வாழும் சில அதிசய வகை இமயமலை மோனல் (Himalayan monal) பறவைகளை நெருங்கிச் சென்று ஆராய்ந்தார். அடுத்து இந்தோனேஷியா. பிறகு சின்னச் சின்ன தீவுகளை எல்லாம் கப்பலில் சென்று பார்த்தார். மெக்ஸிகோ சென்று காதல் பறவை வகை கிளிகள் எப்படி வாழ்கின்றன என்று ஆழமாக ஆராய ஆரம்பித்துவிட்டார். அத்துடன் நில்லாமல் ஒரு புத்தகத்தையும் எழுதி வெளியிட்டார். வகை வகையான பறவைகளை ஒரு புத்தகத்துக்குள் அடக்கிவிட முடியுமா? எனவே அடுத்தடுத்து எழுத ஆரம்பித்தார்.

காட்டில் வாழும் பிராணிகள் பற்றி ஒரு புத்தகம். கலாபகஸ் தீவுகள் பற்றி ஒரு புத்தகம். காட்டுக்கோழிகள் பற்றி ஒரு புத்தகம். காட்டில் வாழும் மற்ற விலங்குகள் பற்றி ஒரு புத்தகம். பிறகு காடு பற்றியே ஒரு புத்தகம். இப்படிச் சொல்லிக்கொண்டே போகலாம். இவற்றில் சில பறவையியல் ஆய்வாளர்களுக்குப் பயன்படும் புத்தகங்கள். வேறு சில, பொதுமக்களும் படிக்கக்கூடிய புத்தகங்கள். பறவைகள் தொடங்கி மீன்கள், காட்டு விலங்குகள் என்று விரிவாகப் பல உயிர்களைப் பற்றி இப்போது பிபி ஆய்வுகள் செய்யத் தொடங்கியிருந்தார்.

கலாபகஸ் தீவுகள் அவர் வாழ்வில் இன்னொரு திருப்புமுனையை ஏற்படுத்தியது. பசிபிக் கடலில் பூமத்திய ரேகைக்கு அருகில் உள்ள தீவுகளுக்குச் சென்றபோது திடீரென்று பிபிக்கு ஒரு யோசனை தோன்றியது. கடல்பயணங்கள் மூலமாகப் பலவிதமான உயிரினங்களைப் பார்க்கமுடிந்தது. பலவிதமான புதிய விஷயங்களைக் கற்கமுடிந்தது. ஆனால் கடலுக்குள் ஏராளமான உயிரினங்கள் வாழ்கின்றன. அவற்றை எப்படித் தெரிந்துகொள்வது? கடல் பயணம் மூலமாகத் தெரிந்துகொண்டதைவிட நேரடியாகக் கடலிடம் இருந்தே நிறைய தெரிந்துகொள்ளமுடியும் அல்லவா? கண்களுக்குத் தெரியும் பறவைகளையும் விலங்குகளையும்போலவே கண்களுக்குத் தெரியாமல் கடலுக்குள் வசிக்கும் ஜீவராசிகளும் முக்கியமல்லவா?

எனவே ஒரு நாள் கடலுக்குள் குதித்துவிட்டார் பிபி. அடி ஆழம் வரை சென்று பார்த்தே தீருவேன் என்று அடம்பிடித்து உள்ளே பாய்ந்தார். பிரமித்துவிட்டார். இதுவரை அவர் காணாத, ஒருவருமே காணாத வித்தியாசமான உலகம் கடலுக்கு அடியில் விரிந்து கிடந்தது. பூச்சியா, செடியா, மீனா என்றே வித்தியாசம் காண முடியாத அளவுக்குப் பல வகையான உயிர்கள் அடி ஆழத்தில் வாழ்ந்துகொண்டிருந்தன. பிபியின் ஆர்வம் அதிகரித்தது. பறவைகளையும் விலங்குகளையும்போலவே கடல் உயிரினங்களைப் பற்றியும் எழுத ஆரம்பித்தார்.

இப்போதுள்ளதைப் போன்ற முதுகில் மாட்டிக்கொள்ளும் நவீன ஆக்ஸிஜன் சிலிண்டர் அப்போது இல்லை. எனவே தண்ணீர்ப் புகாத பெரிய கூண்டு செய்து, உள்ளே காற்று நிரப்பி, வெளியில் பார்க்க கண்ணாடி வைத்து உள்ளே இறக்கிவிடுவார்கள். அந்தக் கூண்டு வழியே உயிரினங்களைப் பார்க்கவேண்டும். உள்ளே ஒரு டெலிபோன் ஒயரும் இருக்கும். அவசரம் என்றால் வெளியில் இருப்பவர்களை அழைக்க! எதற்கு வேலை மெனக்கெட்டு இவ்வளவு ஆபத்தான காரியத்தில் ஈடுபடவேண்டும் என்று பலரும் தடுத்துப் பார்த்தார்கள். பிபி கேட்டால்தானே!

கல்லூரிப் படிப்பையே முடிக்காத பிபி இன்று ஒரு பல்கலைக்கழகம்போல் மாறிவிட்டார். முதல்முறையாகக் கடலின் ஆழத்தில் சென்று ஆய்வு செய்தவராக அவர் இன்று புகழப்படுகிறார். அவருடைய பல ஆய்வுகள் சரியானவை என்று இன்றை அறிவியல் உலகம் பாராட்டுகிறது. இப்போது சொல்லுங்கள், கடலில் பயணம் செய்து சாதனைபடைத்தவர்கள் மத்தியில், கடலுக்குள் குதித்து பயணம் செய்த வில்லியம் பிபி வித்தியாசமானர் தானே?

- பிபி (1962) மொத்தம் 800 கட்டுரைகளையும் 24 புத்தகங்களையும் எழுதியிருக்கிறார்
- காய்ச்சல், தொற்று நோய் என்று ஏராளமான தொல்லைகளை பிபி தன்னுடைய பயணங்களின்போது அனுபவித்தார்.
- முதல் உலகப் போரின்போது அமெரிக்க விமானிகளுக்குப் பயிற்சி அளித்தார்.
- 80-வது வயதுவரை சுறுசுறுப்பாக இருந்தார். உற்சாகமாக மரம்கூட ஏறுவார்.
- அறிவியல் கட்டுரைகளை எளிமையாக மக்களுக்குப் புரியும்படி எழுதியவர்களில் முதன்மையானவர் பிபி.

# பயணங்கள் முடிவதில்லை

வாஸ்கோ ட காமா, கொலம்பஸ், மெகல்லன் என்று நமக்குத் தெரிந்த உலகப் புகழ்பெற்ற கடல் பயணிகள் குறைவானவர்களே. நமக்குத் தெரியாத பயணிகளின் எண்ணிக்கை மிக மிக அதிகம். வெவ்வேறு கனவுகளுடன் விதவிதமான திட்டங்களுடன் உலகின் பல நாடுகளில் இருந்து பலர் புதிய இடங்களையும் புதிய வழித்தடங்களையும் தேடி கப்பலில் சென்றிருக்கிறார்கள். திட்டமிட்டபடியே பயணத்தை முடித்துக்கொண்டு வெற்றிகரமாகத் திரும்பியவர்கள் வெகு சிலரே. அவர்களில் நிஜமான சாதனையாளர்கள குறைவு. பல கடல் பயணிகள் பாதியிலேயே திட்டத்தைக் கைவிட்டுவிட்டு வீடு திரும்பினார்கள். பலர் பாதி வழியிலேயே கொள்ளைக்கூட்டத்தினரால் கொல்லப்பட்டார்கள். மேலும் பலர் உணவு, நீர் இன்றி இறந்தார்கள். பலர் என்ன ஆனார்கள் என்றே இன்றுவரை தெரியவில்லை.

1400கள் முதல் 1700கள் வரையிலான ஐரோப்பிய வரலாற்றைக் கண்டுபிடிப்புகளின் காலகட்டம் என்று அழைக்கிறார்கள். உலகம் என்பது வெறும் ஐரோப்பா மட்டுமேயல்ல என்பதை ஐரோப்பியர்கள் புரிந்துகொண்டது அப்போதுதான். அதுவரை வாய் வழிக் கதைகளாகவும் சுவையான கற்பனையாகவும் மட்டும் இருந்த பல இடங்களைக் கடல் பயணிகள் நேரில் சென்று பார்த்து திரும்பினர். ஆசியாவின் அழகும் அங்கு கிடைத்த விதவிதமான மசாலாப் பொருள்களும் முத்து, பவளம், தங்கம் போன்ற மதிப்புமிக்க கற்களும் அவர்களை ஈர்த்தன.

அதேபோல் ஆப்பிரிக்காவின் கம்பீரமான அழகும் இயற்கை வளமும் கடல் பயணிகளின் ஆசையைத் தூண்டிவிட்டன. அமெரிக்காவை ஒரு புதிய உலகமாக அவர்கள் கண்டார்கள். அங்கு வசித்துவந்த பழங்குடி மக்களின் வாழ்க்கையும் கலாசாரமும் அவர்களை மயக்கின. இங்கும் அவர்களுக்குத் தங்கம் உள்ளிட்ட பல பொருள்கள் கிடைத்தன. புதிய நிலங்களின் அறிமுகம் புதிய கலாசாரத்தையும் புதிய வாழ்க்கை முறையையும் அவர்களுக்கு அறிமுகப்படுத்தியது. அதுவரை அறிமுகமாகாத புதிய காய்கறிகள், பழங்கள், மரங்கள், விலங்குகள் அறிமுகம் ஆயின. வணிகத்துக்கான புதிய வழித்தடங்களை

உருவாக்கமுடிந்தது.

கடலில் சென்றோம், புதிய பகுதிகளைப் பார்த்தோம், வீடு வந்து சேர்ந்தோம் என்று பயணிகள் இருந்துவிடவில்லை. கடல் பயணங்கள் எல்லாமே அடிப்படையில் வணிக நோக்கம் கொண்டவைதாம். புதிய இடங்களைக் கண்டுபிடிக்கவேண்டும் என்பது மட்டுமே பயணிகளின் இலக்கு அல்ல. கண்டுபிடித்த இடத்தை ஆக்கிரமிக்கவேண்டும் என்றும் அவர்கள் விரும்பினார்கள். ‘ஒரு புதிய இடம் கண்டுபிடிக்கப்படுகிறதா? உடனடியாக அந்த இடத்தில் நம்முடைய கொடியை நட்டு வை’ என்றே பயணிகளுக்கு மன்னர்கள் உத்தரவு கொடுத்திருந்தார்கள். ஆட்சியை விரிவாக்குவதுதான் மன்னர்களின் கனவு.

அந்த வகையில் கடல் பயணங்கள் வரலாற்றில் பல அடிப்படையான மாற்றங்களை ஏற்படுத்தியிருக்கின்றன. ஒரு கப்பல் எங்கிருந்து புறப்பட்டுச் செல்கிறதோ அங்கும், எங்கே சென்றடைகிறதோ அங்கும் இந்த மாற்றங்கள் காணப்பட்டன.

வாஸ்கோ ட காமாவை இந்தியாவுக்கு அனுப்பி வைத்த நாடு போர்ச்சுகல். அவர் வந்தடைந்தது இந்தியாவுக்கு. இந்த இரு நாடுகளிலுமே அவருடைய பயணங்கள் ஆழமான மாற்றங்களை ஏற்படுத்தின. அதேபோல், ஸ்பெயின் நாட்டின் உதவியால் அமெரிக்கா வந்தடைந்தார் கொலம்பஸ். ஸ்பெயின், அமெரிக்கா இரண்டையும் இந்தப் பயணம் மாற்றியமைத்தது.

இந்த மாற்றம் சில நேரம் நல்லவிதமாகவும் இருக்கலாம் அல்லது கெட்ட விதமாகவும் இருக்கலாம். உதாரணத்துக்கு இந்தியாவை ஆக்கிரமித்ததன்மூலம் போர்ச்சுகலுக்குப் பல நன்மைகள் விளைந்தன. ஆனால் இந்தியா தன்னுடைய வளங்களை போர்ச்சுகலிடம் இழந்து ஆக்கிரமிக்கப்பட்ட தேசமாக மாறிப்போனது. அதேபோல் கொலபம்ஸின் வரவால் அமெரிக்காவில் வசித்த பழங்குடிகள் பாதிப்படைந்தனர். இப்படி ஒவ்வொரு கடல் பயணமும் மக்களுக்கு நன்மைகளையும் தீமைகளையும் கொண்டுவந்துசேர்த்தன.

ஒவ்வொரு முக்கியப் பயணமும் ஒவ்வொருவிதமான விளைவை ஏற்படுத்தியது. தவறான சிந்தனைகள் ஆதிக்கம் செலுத்தின. நமக்கு வேண்டியதை எங்கிருந்தும் அபகரித்துக்கொள்ளலாம் என்று ஆட்சியாளர்கள் கருதினார்கள். வலிமையானவர்கள் எளிமையானவர்களை வீழ்த்துவதும் வெற்றிகொள்வதும் சரியே என்னும் நம்பிக்கை வலுப்பெற்றது. ஆக்கிரமிப்புகள் நடந்தன. கொலையும் கொள்ளையும் பெருகின. ஓரிடத்தில் இருந்து இன்னோரிடத்துக்குத் தொற்றுநோய்கள் சுலபமாகச் சென்று சேர்ந்தன. எந்த இடத்தை யார் ஆக்கிரமிப்பது என்பதில் பெரிய

நாடுகளுக்கு இடையில் போட்டியும் பொறாமையும் வளர்ந்தன. ஆக்கிரமிப்பை முன்வைத்து பின்னாள்களில் போர்கள் மூண்டன. ஆசியா, ஆப்பிரிக்கா போன்ற இயற்கை வளம் கொண்ட பகுதிகள் அடிமைப்படுத்தப்பட்டன. காலனியாதிக்கம் தொடங்கியது.

அதே நேரம் அறிவியல் துறை வளர்ச்சி பெற்றது. கடல் பயணங்கள் மூலம் கப்பல் கட்டும் தொழில்நுட்பம் வளர்ச்சியடைந்தது. துல்லியமான காந்த வழிகாட்டி கண்டுபிடிக்கப்பட்டது. வரைபடம் உருவாக்கும் கலை வேகமாக வளர்ந்தது. வானியல் துறை வளர்ச்சி கண்டது. நட்சத்திரங்களைக் கொண்டு திசைகளையும் காற்றின் வேகத்தைக் கொண்டு வானிலையையும் தெரிந்துகொள்ளும் ஆற்றல் வளர்ந்தது. வணிகம் வளர்ந்தது. கலாசாரப் பரிமாற்றம் நடந்தது. உலகம் உருண்டையானது என்னும் நம்பிக்கை வலுப்பெற்றது.

கடல் பயணங்கள் மூலம் தெரியவந்த பல உண்மைகளை வைத்து நல்ல கருத்துகளும் பரப்பப்பட்டன. இந்த உலகில் நாம் மட்டுல்ல, பல வகையான மக்கள் இருக்கிறார்கள். நம்முடைய மதம் மட்டுமல்ல, பலவிதமான மதங்களும் நம்பிக்கைகளும் இருக்கின்றன. நம்முடைய கலாசாரம் மட்டுமே உயர்ந்தது என்று நினைக்க முடியாது. நாமே மேலானவர்கள் என்று இனியும் கருத முடியாது. மனிதர்கள் வெள்ளை நிறத்தில் மட்டும் இல்லை, மஞ்சள் நிறத்திலும் பழுப்பு நிறத்திலும் கறுப்பு நிறத்திலும்கூட இருக்கிறார்கள். இவர்கள் அனைவரும் ஒன்றுபோலவே சிந்திக்கிறார்கள், ஒன்றுபோலவே செயல்படுகிறார்கள்.

பல கண்டங்களாக உலகம் பிரிந்திருக்கிறது. பல மொழிகள் மக்களைப் பிரித்து வைத்திருக்கின்றன. பலவிதமான பழக்கவழக்கங்களை அவர்கள் பின்பற்றுகிறார்கள். இருந்தாலும், மக்களை நிறத்தின் அடிப்படையிலோ மதத்தின் அடிப்படையிலோ கலாசாரத்தின் அடிப்படையிலோ பாகுபடுத்திப் பார்க்கக்கூடாது. நாம் அனைவரும் ஏதோ ஒரு வகையில் மற்றவர்களுடைய உறவினர்கள்தாம். வெவ்வேறு நாடுகளையும் கண்டங்களையும் மக்களையும் கடல் ஒன்றிணைக்கிறது. நம்மிடம் உள்ள வேறுபாடுகள் அனைத்தையும் கடல் சமப்படுத்துகிறது. இதை மனதில் வைத்து, கடல் பயணிகளின் வெற்றி, தோல்வி இரண்டிலிருந்தும் நாம் பாடம் படித்துக்கொள்ளவேண்டும். அவர்கள் தொட்ட உயரம், அடைந்த வீழ்ச்சி இரண்டையும் நாம் நினைவில் வைத்திருக்கவேண்டும்.

கண்டுபிடிப்புகளின் காலகட்டம் என்பது மறுமலர்ச்சியின் காலகட்டமாகவும் அறியப்படுகிறது. மனித குல வரலாற்றிலேயே குறிப்பிடத்தக்க வகையில் ஓவியக்கலையும் சிற்பக்கலையும் ஒரு புதிய எழுச்சியை அடைந்தன. தத்துவங்கள் வளர்ந்தன. கலையும்

இலக்கியமும் பெரும் பாய்ச்சல்களை நிகழ்த்தின. கலீலியோ, ஷேக்ஸ்பியர், டாவின்ச்சி, மைக்கல் ஏஞ்சலோ, கோப்பர்நிகஸ், மார்டின் லூதர் என்று தொடங்கி பல முக்கியமான ஆளுமைகள் இந்தக் காலகட்டத்தில் தோன்றினார்கள். இவர்களால் நம் அறிவு வளர்ந்தது. நம் உலகைப் பற்றிய பார்வை விசாலமானது. நம்முடைய ரசனை மேம்பட்டது. நம்முடைய அறிவியல் கண்ணோட்டம் வளர்ச்சிபெற்றது. இவை அனைத்துக்கும் பின்னணியில் எண்ணற்ற கடல் பயணங்கள் இருக்கின்றன.

எல்லாவற்றுக்கும் மேலாக, உலகை மாற்றிய கடல் பயணங்கள் நமக்குக் கற்றுத் தரும் மிக முக்கியமான ஒரு விஷயம் என்ன தெரியுமா? பயணங்கள் ஒருபோதும் முடிவடைவதில்லை. நம் ஒவ்வொருவருக்கும் ஒரு கனவு இருக்கிறது. அந்தக் கனவை நாம் துரத்திப் போகவேண்டும். அந்தக் கனவை எப்படியாவது நனவாக்கவேண்டும். நீண்ட பயணம் மேற்கொண்டால்தான் அந்தக் கனவு நனவாகும்.

கடல் காத்திருக்கிறது. கப்பலும் காத்திருக்கிறது. நீங்கள் தயாரா?

---

